

# பத்தொன்பதாம் சித்தர்

# ஸ்ரீஸ்ரீஸ்ரீ எச்சில் பொறுக்கி

# ஆறுமுக சுவாமி

ஏ. என்.கே. சுவாமி



எனது குருநாதர்
ஜோதிட சக்கரவர்த்தி
பசிப்பிணி மருத்துவர் சாதுக்கள் நேயர்
ஏ. என்.கே. சுவாமிக்கு காணிக்கை



## கற்பக விநாயகர் துதி

அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பாதம் பணிந்து பாரீர்
பொய்யில்லை கண்ட உண்மை

– கவிஞர் கண்ணதாசன்

விலை ரூ. 70 /–
இந்நூல் பொன்முடி பதிப்பகம் வெளியீடு
தொகை ஆறுமுகசாமி கோவில் அறக்கட்டளைக்கே



## மதுரை மீனாட்சி அம்மன் துதி

கையில் கிளியேந்தி, கண்ணில் அருளேந்தி,
நெய்யில் சுடராய் நின்றோங்கி – வையத்தை
மாதாவாய்க் காக்கும் மாமதுரை மீனாட்சி
பாதம் தொழுவோம் பணிந்து.

## பொருளடக்கம் :

## பத்தொன்பதாம் சித்தர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ
## எச்சில்பொறுக்கி ஆறுமுக சுவாமி





# அத்தியாயம் – 1

## பத்தொன்பதாம் சித்தர்

## ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ எச்சில் பொறுக்கி ஆறுமுக சுவாமி

பொற்கிழிக் கவிஞர், காசி ஸ்ரீ, கயிலை மணி, முத்தமிழ்ப் பேரறிஞர், (அரு.சோ) அருட் கவிஞர் **அரு.சோமசுந்தரன் M.A.B.T.** அவர்கள் 21.04.2016 அன்று கோட்டையூர் எழில்நகர் சித்தர் ஸ்ரீ ஆறுமுகசுவாமி கோவில் அருகில் அமைந்துள்ள சித்தர் வளாகத்தைத் திறந்து வைத்து பாடிய பஞ்ச ரத்ன கீர்த்தனைகள் – பஞ்ச ரத்ன கீர்த்தனை – 3

பதினெட்டுச் சித்தர்களும் பயன் நல்கும் வளாகம் இது!
படித்துப் பார்மின்!
பழமைமிகும் அகத்தியரும், போகமுனி, சட்டை முனி
இடைக்கா டர்கள்
மதிமிக்க தேரையரும், கருவூரார், திருமூலர்,
காலாங்கி நாதர்,
கருணைமிகு கொங்கணவர், பாம்பாட்டிச் சித்தருடன்
காக புகண்டர்,
மதியூகி முனிவர், சிவ வாக்கியரும் பதஞ்சலியும்
முனிகோ ரக்கர்
மாண்புடைய ரோமரிஷி நந்தீசர் புலிப்பாணி
மகத்துவத்தால்
**பதினெட்டுச் சித்தரெனப் பாராட்ட ஆறுமுக**
**சாமி இங்கே**
**பத்தொன்ப தாம் சித்தர் என வந்தார் வளாகம் இது.**
வளர்க மாதோ :

சித்தரை அறிதல் எளிதான செயலன்று :
சித்தர் என்றும் சிறியர் என்றும் அறியொணாத சீவர்காள்!
சித்தர் இங்கு இருந்த போது பித்தர் என்று எண்ணுவீர்,
சித்தர் இங்கு இருந்தும் என்ன பித்தன் நாட்டிருப்பரே:
அத்தன் நாடும் இந்த நாடும் அவர்களுக்கு எலாம் ஒன்றே

– சிவவாக்கியர்

அற்புத சித்தர் ஆறுமுக சுவாமியை அருட்கவிஞர் அரு.சோ.தன் அருட் திறத்தால் பத்தொன்பதாம் சித்தரென நமக்கு அடையாளம் காட்டுகிறார். ஸ்ரீ ஆறுமுக சாமியுடன் அவர் வாழ்ந்த காலத்தில் 10 ஆண்டுகளுக்கு மேலாகப் பழகி அவரிடம் "குருவும் கொழையும்" "பாலும் பழமும்" மந்திர உபதேசமும் பெற்று அவருக்கு சீடராகும் பாக்யம் பெற்றேன்.

கடந்த 1981ல் ஆறுமுக சுவாமி ஜீவசமாதி அடைந்து கடந்த 35 ஆண்டுகளாகத் தொடர்ந்து சிறப்பாக தினசரி பூஜையும் அவர் சித்தி அடைந்த வைகாசித் திங்கள் விசாக நன்னாளில் அவருக்குக் குருபூஜையும் அவரைக் காணவரும் காவி உடைதரித்த சன்யாசிகளுக்கு மகேஸ்வர பூஜையும் செய்து அவரின் அருளுக்கு பாத்யமாகி இருக்கிறேன். எனது கடந்த 45 ஆண்டுகளில் நான் ஆறுமுகசுவாமியைக் கர்மவினை நீக்கும் அற்புத சித்தராகவே அறிந்துள்ளேன். அருட் கவிஞர் அரு.சோவோ அவர் பத்தொன்பதாம் சித்தரென தனது அருட்திறத்தால் அடையாளம் காட்டியுள்ளார். அவரது வாக்கு சத்தியமான உண்மை என்பதை நான் உணர்கிறேன்.

நான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம் என்ற திருமந்திர வாக்கின்படி ஆறுமுக சுவாமி பக்தர்கள் அனைவரும் பெறவேண்டும் என்ற உயரிய நோக்கில் இந்தச் சிறிய கையேட்டினை வெளியிட்டுள்ளேன். இதன் முதல் அத்தியாயம் நான் கண்ட அருசோ என அருசோவின் பன்முக திறனையும் அருட்கவிஞர் அரு.சோ. அவர் எழுதிய பஞ்ச ரத்ன கீர்த்தனைகளும் அடங்கியது. மேற்படி கீர்த்தனைகள் படிக்க படிக்க தெவிட்டாத இன்பம் தருவது. படிப்போரை ஆன்மீக நன்னெறியில் உய்விப்பது. அரு.சோவின் பஞ்சரத்தின கீர்த்தனைகளை நான் மீண்டும், மீண்டும் படித்து இன்புற்றேன். நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற திருமந்திர வார்த்தைக்கிணங்க நான் பெற்ற இன்பம் நீங்களும் பெற வேண்டும் என்ற அவாவில் பஞ்சரத்தின கீர்த்தனைகளை அச்சிட்டு அரு.சோ வின் முத்து விழாவில் வாழ்த்து மடலாக வெளியிட்டுள்ளேன். நீங்களும் படித்து இன்புறுவீர்.

**நான் கண்ட அரு.சோ :**

அருமை நண்பர் திரு.அரு.சோவை பல்லாண்டுகளாக நான் அறிவேன்; என்றாலும் திருவருள் மற்றும் குரு அருளால் கடந்த ஓராண்டாக அவருடன் நெருங்கிப்பழகும் நல்வாய்ப்பு எனக்கு கிடைத்தது. ஆறுமுகசாமி பதிகம் எட்டில் கண்ட

"என்னை நீ ஆண்டதும் உன்னை நான் கண்டதும் எவ்வாறு பாடுவேனோ!.... உன்திறம் சொல்லுதல், உன் புகழ்பாடுதல் ஒரு நாவால் முடிவதொன்றோ?" என்று ஆறுமுகசாமி பதிகத்தில் கண்டது போல நான் அரு.சோவை கண்டதும் அவர் என்னை முழுமையாக ஆட்கொண்டார். அவரது திறத்தையும் புகழையும் ஒரு நாவால் சொல்ல இயலாது. கோட்டையூர் எழில்நகர் சித்தர் ஆறுமுகசாமி கோவில் அருகில் அமைந்துள்ள சித்தர் வளாகத்தை திறந்து வைக்க அரு.சோவை அழைத்த போது அவர்தம் துணைவியார் மற்றும் மக்களுடன் வந்து 21.04.2016 அன்று திறந்து வைத்து அவர் பாடிய பஞ்சரத்ன கீர்த்தனை அவர் பாடுவார் முத்தப்பர் போல தெய்வ அருள்பெற்ற அருட்கவிஞர் என்பதைக் காட்டுகிறது.

அவரது பஞ்ச ரத்ன கீர்த்தனை 3 – ல் மகுடம் சூட்டுவது போல 18 சித்தரென பாராட்ட ஆறுமுகசாமி 19–ம் சித்தரென வந்தார் வளாகம் இது வளர்க மாதோ! என ஆறுமுக சித்தரை அரு.சோ அருட்திறத்தால் ஆறுமுகசாமியை 19–ம் சித்தரென நமக்கு அடையாளம் காட்டுகிறார். அரு.சோவின் அருட்திறனைக் கண்டு மகிழ்ந்து ஆறுமுகசாமி அரு.சோவை அருட்கவிஞர் அரு.சோ. என்று அழைக்க வேண்டும் என்று ஆணையிட்டதுடன் அவர் 100 ஆண்டு வாழ்ந்து ஆன்மீகப் பணியையும் தமிழ்வளர்க்கும் பணியையும் தொடர வேண்டும் என்று சித்தம் கொண்டு ஸ்ரீ துர்முகி வருடம் ஆவணி மாதம் 31–ந் தேதி 16.09.2016 வெள்ளிக்கிழமை பௌர்ணமி நாளில் ஆறுமுகசாமி அருட்சன்னதியில் அரு.சோவுக்கு ஆயுஷ் ஹோமமும் சித்தருக்கு அபிஷேக ஆராதனையும் அன்னதானமும் செய்ய என்னை பணித்துள்ளார். மேலும் அரு.சோவின் அருட்பணி தொடர அருட்கவி

அரு.சோ அறக்கட்டளை அமைக்க வேண்டுமென்று அதற்கு முதல் தவணை காணிக்கையாக ரூபாய் 25,000/- (இருபத்து ஐந்தாயிரம்) காசோலையை அருட்கவி அரு.சோவிடம் அளிக்கும்படி ஆணையிட்டுள்ளார். இந்த வேண்டுகோளை அருட்கவி அரு.சோ. அன்புடன் ஏற்க வேண்டுகிறேன். அருட்கவி அரு.சோ.அறக்கட்டளை அமைய எச்சில்பொறுக்கி ஆறுமுகசாமி அறக்கட்டளை ஒல்லும் வகையெல்லாம் உடனிருந்து உதவும். மேற்படி அறக்கட்டளைக்கு அரு.சோவே நிர்வாக அறங்காவலராக இருப்பார். மற்ற அறங்காவலர்களையும் அவரே நியமிப்பார். சித்தரின் அருள் ஆணைப்படி அருட்கவி அருசோ அறக்கட்டளை நிறுவி செப்டம்பர் 7-ம் தேதி பதிவு செய்யப்பட்டுள்ளது. அருள் ஆணைப்படியே இன்று 16.09.2016 ஆயிஷ் ஓமமும் சித்தருக்கு அபிஷேக ஆராதனையும், அன்னதானமும் நடைபெற்றது.

1. துணைவியாரை கௌரவித்து பெண்மையை போற்றுதல்
2. நடமாடும் கலைக்களஞ்சியம் நவில்தொறும் நூல் நயம் போல
3. அரு.சோவின் பன்முகத் திறனும் பணிவும் இன்சொலும்
4. அரு.சோவின் திருமுறை ஈடுபாடும் அதனை மக்களிடம் பரப்ப அவரது செயல்பாடும்
5. பாரதியின் கனவை நனவாக்கியவர்
6. அரு.சோவுக்கு நாம் என்ன செய்யப் போகிறோம்?
7. அரு.சோவுக்கு வேண்டுகோள்
8. நகரத்தார் பெருமையும் அரு.சோவுக்கு நமது கடமையும்
9. ஈத்துவக்கும் இன்பம்

**1. துணைவியாரை கௌரவித்தல் :**

அரு.சோ துணைவியாரை சித்தர் வளாகத் திறப்பு விழாவிற்கு அழைத்து வந்து அவர் பங்குபெறும் ஒவ்வொரு நிகழ்விலும் மரக்கன்று நடுதல், வளாகம் திறத்தல், அமைப்பாளருக்கு பொன்னாடை போர்த்தல் துணைவியாரை முன்நிறுத்தி கௌரவபடுத்தியதை பார்க்கும் போது எப்படி ஒருவர் தன் மனைவியை

கௌரவிக்க வேண்டும் என்பதை நான் கண்டேன். Ladies First என்கிற ஆங்கிலேயரின் அந்த அருமையான பண்பாட்டையும், பெண்மையை போற்றுவதையும் நான் கண்டேன். இது அரு.சோவிடம் நாம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் - அவர் துணைவி நீலா அவர்களும் அரு.சோ உடன் கயிலை சென்று கயிலைமணி பட்டம் பெற்றவர்.

**2. நடமாடும் கலைக்களஞ்சியம் நவில்தொறும் நூல் நயம் போல:**

பல நாள் பல புத்தகங்களைப் படித்தறிய வேண்டிய பல அரிய விஷயங்களை அரு.சோவிடம் சில மணித்துணிகள் பேசினாலே நாம் அறியலாம்.

1. கோவிலூர் ஆதினம் மற்றும் வீரப்ப சுவாமிகள் பற்றி அவரிடம் பேசியபோது கோவிலூர் ஆதின சிறப்பையும் வீரப்ப சுவாமிகள் பெருமையையும் கூறியது கோவிலூர் ஆதினம் பற்றி முழுமையாக அறிய என்னைத் தூண்டி சித்தர் வளாகத்தில் 12 பேரின் திருவுருவ படங்களை திறந்து வைக்க என்னை தூண்டி 16.9.2016 ல் அவர்களின் படங்களும் சித்தர் வளாகத்தில் திறந்து வைக்கப்பட்டன.

2. அரு.சோவிடம் அவர் பற்றி கவிதை பாட ஆசை - ஆனால் கவிதை பாட நான் கவிஞன் அல்லவேவ என்று கூறிய போது - அவர் கூறியது You are not a poet but you are poetic நீ கவிஞன் அல்ல ஆனால் கவித்துவம், மிகுந்தவன். அவரிடம் பழகிய போது நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு என்பதை என் அனுபவத்தில் கண்டேன்.

ஒவ்வொரு முறையும் நான் அவர் வீடு சென்று விடைபெறும்போது கார்வரை உடன் வந்து ஓட்டுநரிடம் அய்யாவை பத்திரமாக அழைத்துச்சென்று பார்த்துக்கொள்ளுங்கள் என்று கூறி வழிஅனுப்புவார்கள். அவரது இந்தப் பண்பாடு நாம் ஒவ்வொருவரும் பார்த்து பின்பற்ற வேண்டிய ஒன்று.

**3. அரு.சோவின் பன்முகத்திறனும் பணிவும் இன்சொலும்:**

1.இராமாயணம், 2. மகாபாரதம், 3. கந்தபுராணம்,

4. பெரியபுராணம், 5. திருவிளையாடற் புராணம், 6. பாகவதம், 7.சிலப்பதிகாரம், 8.சிவமகாபுராணம் முதலிய ஆன்மீகப் புதையல்களை ஓய்வின்றி ஊர் ஊராகச் சென்று தொடர் சொற்பொழிவாற்றி மக்களை நன்னெறிபடுத்தும் உலகம் சுற்றிய தமிழர் என்ற பன்முகத் திறன் கொண்டவரானாலும் அவரது பணிவும் இன்சொலும்

1. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்கு
   அணியல்ல மற்றுப் பிற.

2. எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
   செல்வர்க்கே செல்வம் தகைத்து

என்ற குறட்பாக்களுக்கு அவர் இலக்கணமாய் திகழ்வதை கண்டு நான் வியந்து நின்றேன்.

**4. அரு.சோவின் திருமுறை ஈடுபாடும் அதனை மக்களிடம் பரப்ப அவரது செயல்பாடும் :**

அரு.சோ தனி ஒருவராக சமயக்குரவர் நால்வர்க்கும் நால்வர் கோவில் அமைத்து குடமுழுக்கும் செய்து தமது 80 – நிறைவு சதாபிஷேக முத்து விழாவையும், நூல் வெளியீட்டு விழாவையும் மேற்படி நால்வர் கோவிலில் நடத்தியது அவரது திருமுறை ஈடுபாட்டுக்கும் அதனைப் பரப்ப அவர் மேற்கொள்ளும் செயல்பாட்டுக்கும் சான்றாக நிற்கிறது.

திருவாசக முற்றோதல் குழு தலைமை திருமுறைகளில் தலையாயதும் திருவாசகத்திற்கு உருகார் ஒருவாசகத்திற்கும் உருகார் என்று பெருமை பெற்றதும் சீரருள் அம்பலத்துள் திருநடம் பயிலுவாரே கையேடு பிடித்து எழுதிட பணித்தார் என்று நடராசரால் எழுதப் பெற்ற திருவாசகத்தை முற்றோதல் குழு அமைத்து அதற்கு தலைமை ஏற்று நாடு முழுவதும் பரப்பி வருகிறார்.

**5. பாரதியின் கனவை நனவாக்கியவர் :**

1. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்.

2. இறவாத புகழுடைய புது நூல்கள். தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்.

3. மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை யில்லை

4. திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கஞ் செய்தல் வேண்டும் என்ற பாரதியின் கனவை நனவாக்கியவர்.

**6. அரு.சோவுக்கு நாம் என்ன செய்யப் போகிறோம்?**

மேற்படி பாரதியின் கனவை நனவாக்கியவர் அரு.சோ ஷேக்ஸ்பியரின் 14 நாடகங்களை மொழி பெயர்த்துள்ளார். பதினையாயிரத்திற்கும் மேற்பட்ட கவிதைகளை எழுதியுள்ளார். நூறு நூல்களுக்கு ஆசிரியர்.

கவிதை, கட்டுரை, இலக்கிய திறனாய்வு நாடகம், மொழி பெயர்ப்பு, பயணம், ஆன்மீகம் பலதுறைகளில் பாண்டித்யம் பெற்றவர் அரு.சோ அவர் சமயக்குரவர் நால்வர்க்கு கோயில் கட்டி தனி ஒருவராக அவர் குடமுழுக்கு செய்து திருமுறை பரவ முற்றோதல் குழு அமைத்து நடத்தி பாரதியின் கனவை நனவாக்கிய அரு.சோவுக்கு நாம் என்ன செய்ய போகிறோம்?

**7.அரு.சோவுக்கு வேண்டுகோள் :**

ஷேக்ஸ்பியரின் நாடகங்களை மொழிபெயர்த்தது போல தத்துவ மேதை எமர்சனின் கட்டுரைகளையும் குறிப்பாக Compensation" Spiritual laws கட்டுரைகளை மொழி பெயர்க்க வேண்டும். அது போலவே மில்டன், ஷெல்லி இவர்களின் கவிதைகளையும் தமிழில் மொழிபெயர்த்தல் வேண்டும்.

அது போல Cardinal newman ன் ஜெண்டில் மேன் போன்ற சிறந்த ஆங்கில கட்டுரையை மொழி பெயர்த்தல் வேண்டும்.

இறவாத தமிழ்நூல்கள் இயற்றல் வேண்டும்.

அருட் கவிஞர் அரு.சோ. மேற்படி பணிகளை தொய்வின்றி செய்ய

அவருக்கு அறக்கட்டளை அமைத்து அமைதியான இனிய சூழலில் அவர் பணி தொடர நகரத்தார் பெருமக்கள் ஒல்லும் வகையெல்லாம் உதவ வேண்டும்.

**8. நகரத்தார் பெருமையும் அரு.சோ.வுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையும்:**

கோடி செல்வத்தை ஒருரையால் ஒரு நொடியில் துறந்து சித்தரான பட்டினத்தார் நகரத்தார் அரிய பெரிய தத்துவங்களை எளிய இனிய வார்த்தைகளால் கவிதை ஆக்கி பாமரரும் படித்து இன்புறச் செய்த கண்ணதாசனும் நகரத்தார்.

தன் அருட்திறத்தால் தன் பாடல்களில் நகரத்தார் பெருமையை நாடறியச் செய்த பாடுவார் முத்தப்பரும் நகரத்தார். அந்த வரிசையில் அரு.சோவும் அருட் கவிதான் என்கிறார் அற்புத சித்தர் ஆறுமுகசாமி கவிஞர்களையும், அறிஞர்களையும் வாழும் காலத்தில் வாடவிட்டு அவர்கள் மறைந்த பின்னர் சிலை வைத்து சிலையில் காக்கை குருவி எச்சமிடாமல் இருக்க குடை வைப்பது தான் நமது வழக்கம்.

அதுபோலன்றி நமது அருட் கவிஞர் வாழும் காலத்திலேயே பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்க்கவும் இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றவும் அவருக்கு அறக்கட்டளை அமைத்து உதவ வேண்டியது. நமது கடமை அதை நமது நகரத்தார்கள் அவசியம் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

**9. ஈத்துவக்கும் இன்பம்:**

செல்வத்துப் பயனே ஈதல்
ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம் உடைமை
வைத்திழக்கும் வன்கணவர் என்கிறார் வள்ளுவர்
கொடுப்பது என்பது ஒரு இன்பம்

**ஈட்டலும் காத்தலும் வகுத்தலும்:**

என் வாழ்வின் குறிக்கோள் என்றார் அண்ணாமலை அரசர்.

பலருக்கும் பொருளை ஈட்டத் தெரியும். சிலருக்கு காக்க தெரியும். ஆனால் ஒரு சிலருக்கு மட்டுமே அதனை வகுக்க தெரியும். பொருள் படைத்த செல்வந்தர் அதனை ஈந்து அந்த மகிழ்ச்சியை அதனால் வரும் இன்பத்தை அனுபவிக்க வேண்டும்.

அன்றறிவாம் என்னாது அறம் செய்க என்று வள்ளுவர் சொன்னது போல நாளை செய்வோம் என நினையாமல் கொடுக்க நினைத்த அதே நேரத்தில் பொருளை ஈந்து மகிழ வேண்டும். அருட் கவிஞர் அரு.சோவின் அறக்கட்டளைக்குத் தயக்கமின்றி கொடுத்து அறக்கட்டளையை நிறுவ உதவ வேண்டுகிறேன்.

**பாரதி வேண்டியது போல அருட்கவி**

அரு.சோவின் அறக்கட்டளைக்கு
நிதிமி குந்தவர் பொற்குவை தாரீர்!
நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொ லருளீர்!
ஆண்மை யாள ருழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்
வாணி பூசைக் குரியன பேசீர்!
எதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெ ருந்தொழில் நாட்டுவம் வாரீர்!
என்று உங்களை வேண்டி நான் விடைபெறுகிறேன்.

– ஏ.எல்.சி.



## அரு.சோவின் பஞ்சரத்ன கீர்த்தனைகள் :

சித்தமெலாம் ஈர்க்கின்ற சித்தர் ஆறு முககசாமி
செயலி னாலே
சிதம்பரம் ஓர் சீடராகி, செல்வந்தர் சித்தராகி
"சித்தர் வளாகம்"
புத்தமுதாய் அமைந்துள்ள பொழுதினிலே இன்றைக்குப்
புனித ராகிப்
புத்தகத்து வங்கியுடன் படிப்பகமும் புகைப்படமும்
பூசைச் சாமான்
எத்தனையோ திரட்டியுளார். எழுச்சிமிகு வகுப்புக்கள்
இனிமை நல்கும்
எழிலான மரக்கன்று கோட்டையூர் சாலை வரை
என்னே! என்னே!!
**அத்தனையும் மனம் வளர்க்க, ஆன்மீக மரம் வளர்க்க**
**அறிய வேண்டி**
ஆறுமுக சாமியினால் அறி தியான மையமிது
வளர்க மாதோ! – 1

**கோட்டையூர் என்றாலே குடியிருக்கும் செல்வமெலாம்**
**கொடிகள் நாட்டும்**
**குலமக்கள் வாழ்கின்ற கோட்டையிலோர் கொடியாகக்**
**குன்றம் வந்தார்!**
பாட்டையினை அவர்போடப் பக்தியுடன் இவர்பாடப்
பணிந்து சென்று
பலகாதம் வந்துள்ளார் சித்தரது வளாகத்தைப்
படைத்துத் தந்தார்.
**ராட்டையினை காந்தி மகான் தந்தது போல் சிதம்பரமோ**
**வளாகம் தந்தார்.**
ராகத்தை நாரதரும் கீர்த்தனங்கள் தியாகய்யர்
ராசி போல!

வாட்டமிலா ஆறுமுக சாமியது கோவிலிலே
சித்தர் வளாகம்!
வளர்கின்ற இளம் சித்தர்! வழிகாட்டும் சிதம்பரமே!
வாழ்க நீடு. - 2

பதினெட்டுச் சித்தர்களும் பயன்நல்கும் வளாகம் இது!
படித்துப் பார்மின்!
**பழுமைமிகும் அகத்தியரும், போகமுனி, சட்டை முனி
இடைக்கா டர்கள்
மதிமிக்க தேரையரும், கருவூரார், திருமூலர்,
காலாங்கி நாதர்,
கருணைமிகு கொங்கணவர், பாம்பாட்டிச் சித்தருடன்
காக புகண்டர்,
மதியூகி முனிவர், சிவ வாக்கியரும் பதஞ்சலியும்
முனிகோ ரக்கர்
மாண்புடைய ரோமரிஷி நந்தீசர் புலிப்பாணி
மகத்து வத்தால்
பதினெட்டுச் சித்தரெனப் பாராட்ட ஆறுமுக
சாமி இங்கே
பத்தொன்பதாம் சித்தர் எனவந்தார்** வளாகம் இது
வளர்க மாதோ! - 3

**விரிவான அறிவுரைகள் கலியுகத்தின் புதுச்சித்தர்
விவேகா னந்தர்**
வெற்றிமிகு வாசகங்கள், படைப்புக்கள் அத்தனையும்
விளங்கும் வளாகம்!
**சரியான தருணமிது! சரியான சித்தருக்குச்
சால்பாய்ச் சீடர்!**
சாகசங்கள் செய்யாத சாமான்யர்! பேராசன்!
சான்றோர் ஆவார்!
**புரியாத உலகிற்குப் புரியவைக்க வந்ததொரு
புகைப்ப டம்நீ!**

புகழ்மிக்க சிதம்பரமே! கோட்டையூர்ப் புதுச்சித்த!
பொன்னே! தன்னை
அறிய ஒரு வாய்ப்பாகத் தன்னை அறி மையமிது!
தியான மையம்!
ஆறுமுக சாமியிவர் அருகினிலே மையமிது!
ஆல்போல் வாழ்க! - 4

பல்கலையில் படித்தாலும், பலதுறையில் போராடிப்
பணிசெய் தாலும்
பம்பரமாய்ச் சுழன்றாலும், குடும்பத்தில் உழன்றாலும்
பகடைக் காயாய்
ஒல்லுகிற திசையெல்லாம் உருண்டாலும் சிதம்பரமே!
உன்னை ஈர்க்க
ஒருவன்எனும் ஒருவன்தான் ஆறுமுகசாமி இவர்
உயிராய் வந்தார்!
சொல்லுகிற மந்திரங்கள் பலகோடி ஆனாலும்
சுவைஒன் றேதான்!
சூட்சுமத்தை அறிந்ததனால் மாணிக்கவாசகர்போல்
சுயத்தை விட்டு
வெல்லுகிற ஆறுமுக சாமிஇவர் போட்டவழி
விரைகின் றாய் நீ!
வெற்றிமிகு சிதம்பரமே! நீயும் ஒரு சித்தன்தான்!
வெல்க! வாழ்க! - 5



# அத்தியாயம் 2 :

**ஆறுமுகசுவாமி பதிகமும் காவடிச் சிந்தும் :**

"உன் திறம் சொல்லுதல், உன் புகழ் பாடுதல்
ஒரு நாவால் முடிவ தொன்றோ"?

என்ற பதிக வரிகளுக்கு ஏற்ப ஸ்ரீ ஆறுமுக சாமியின் திறத்தையும் புகழையும் ஒரு நாவால் சொல்ல இயலாது.

பாமாலை பாடிய பாவலர் இளவரசு அவர்கள் புகழ்மிக்க அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புகழ் பூத்த பேராசிரியராகத் திகழ்ந்தவர். உடை நலமும் நடை நலமும் வாய்க்கப் பெற்றவர்; பேச்சாற்றலிலும் எழுத்தாற்றலிலும் வலலவர். விரைந்து கவிதை இயற்றுவதிலும் செயல் முடிப்பதிலும் விற்பன்னர்.

சுவாமிகளின் இரண்டாம் ஆண்டு குருபூஜையின் போது சுவாமியின் அவர்கள் பெயரால் இளவரசை பதிகம் பாட நான் AL.C வேண்டினேன். ஆறுமுகசாமியின் அருளால் ஐந்தாம் ஆண்டு குருபூஜை விழாவில் மற்றுமொரு பதிகம் இளவரசு பாடித் தந்தார்கள். இப்போது அது எல்லோருக்கும் பாராயண நூல். எல்லோரும் எளிதில் பயில ஓத இனிய பாடல்களை இதில் பாடியுள்ளார். ஈடுபட்டுப் பாடியுள்ளார். மனதில் பதியும் படியும் என்றும் திரும்பச் சொல்ல வாய்ப்பாகவும் எளிய சொல். எளிய சந்தம் அமைத்துப் பலர் நாவில் தவழும்படி பாடிய கவிஞர் இளவரசு என்றும் நம் நினைவில் நிற்பார். அவரால் புகழப் பெற்ற மகான் புகழும் பாடல் மூலம் பரவி பலருக்கு மகிழ்ச்சியையும் இன்பத்தையும் நல்வாழ்வையும் நல்கும்.

தூய முனிவரின் சான்றோரின் சால்புகள், ஆசிகள், வாழ்த்துக்கள், வையம் வளமுடன் வாழ வழிகாட்டும். ஸ்ரீ ஆறுமுக சாமிகளுடன் பத்து ஆண்டுகள் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்று அவரிடம் குருவும் கொழையும் "பாலும் பழமும்" மந்திர உபதேசமும் பெறும் பாக்யம் பெற்றவன் நான். பதிகத்தில் கண்ட செய்திகள் அனைத்தையும் படித்துப் பார்த்த போது இந்த பதிகத்தை உண்மையில் ஆறுமுக சுவாமியே இளவரசு மூலம் பாடியுள்ளார்

என்று நான் உறுதியாய் நம்புகிறேன். இருபது பதிகங்களும் தொடர்ந்து வருகின்ற 24 சிந்து அடிகளும் உண்மையில் ஆறுமுக சுவாமியின் மந்திரங்களை காவடிச் சிந்தில் காண வேண்டும். வரம் தந்தருள்வாய் ஆறுமுகசாமி வினைகளையே பொசுக்கிடுவாய் ஆறுமுகசாமி என்ற சிந்து அடிகளுக்கேற்ப பக்தர்கள் வாழ வேண்டும்.

வரங்களை தந்து அவர்களின் வினைகளை பொசுக்கி அருள் ஆசி வழங்கி வருகிறார் ஆறுமுக சுவாமி.

## ஆறுமுக சுவாமிகள் பதிகம் :

கொண்டாடக் கொண்டாடக் குறையெல்லாம்
மாய்க்கின்ற குருவாக வந்த ஞானி!
குறையுடைய விராலிமலை முருகனின் சாபத்தைக்
கொண்டுவாழ் வித்த மேலோன்!
பண்டார மானாலும் பார்ப்பவர் தமக்கெலாம்
பரமனாய் வந்த யோகி!
பழமான முனியாகி வாராகி தானாகிப்
பாராள வந்த நம்பி!
அண்டினார் எல்லாரும் அருளமுதம் உண்ணவே
அவனியில் வந்த ஆண்டி!
அருளாலும் பொருளாலும் அன்பரை வாழ்விக்கும்
ஆறுமுக சாமி ஐயா! –1

எச்சிலிலை பொறுக்கியென எல்லோரும் சொல்லவே
எளிமையாய் நடந்த தெய்வம்!
எங்கெலாம் அன்பர்கள் நினைப்பரோ அங்கெலாம்
ஏற்றமுற வந்த தெய்வம்!
பிச்சையெடுத் துண்டாலும் அருட்பிச்சை வழங்கியே
பெருமையாய் வாழ்ந்த தெய்வம்!
பீடுபெறும் விராலிமலை நீடுபுகழ் பெற்றிடப்
புகலிடம் கொண்ட தெய்வம்!
அச்சமெனை நாடாமல் அருளெனை நோக்கவே

அநுதினம் ஆண்ட தெய்வம்!
அடியவர்கள் சிறந்தோங்கு கோட்டையூர் எழுந்தருளும்
ஆறுமுக சாமி ஐயா! -2

சின்னவரும் பெரியவரும் உனதுபுகழ் ஏத்திடச்
செகத்தினில் நின்ற தேவா!
சிறுமதலை எனவந்து அருள்மொழிகள் பலபகரும்
சிவமான இனிய நாதா!
முன்பிறந்த நாயகியாம் மூதேவி வாசத்தை
முகமலர்ந் தேற்ற தேவா!
முருகனருள் பெற்றுயர் விராலிமலை தன்னிலே
முத்திநிலை சொற்ற கோவே!
அன்னையென அப்பனென அன்பாகி உலகத்தை
அநுதினம் காக்கும் ஐயா!
அடியவரின் உள்ளத்தை ஆட்கொள்ள எழுந்தருளும்
ஆறுமுக சாமி ஐயா! -3

இழிவான பொருளென்ன எல்லோரும் நீக்கினால்
இனிப்பாக எண்ணும் நாதன்!
இவ்வுலக மக்களின் நலங்காண எண்ணியே
இணையிலாத் துன்பம் ஏற்றோன்!
பழியான எச்செயலும் பார்வையால் போக்கியே
பரிசுத்த மாக்கும் ஐயன்!
பழனிமலைப் போகரின் பட்டறிவு தாங்கியே
பாரினில் வாழ்ந்த தூயோன்!
அழகான மாளிகைகள் அன்புநிறை உள்ளங்கள்
அவற்றினால் கீர்த்தி மிக்க
அறம்வளரும் திருநகராம் கோட்டையூர் எழுந்தருளும்
ஆறுமுக சாமி ஐயா! -4

வருவதும் போவதும் வாழ்க்கையே ஆமெனில்
வாழ்வதால் என்ன நோக்கம்?

வரவுவரு வழியையும் செலவுசெயு முறையையும்
வகுப்பதே வாழ்க்கை யாமோ?
பொருளென அறிவினுள் பொருந்தியே நிற்குமோர்
புண்ணியப் பேறு தன்னைப்
பொதுவென நோக்காமல் இதுவென அறிவதே
புன்பிறப் பொழிப்ப தாகும்!
அருளிது காணென ஆனந்த மானதோர்
அப்பொருள் சொற்ற வேதா!
ஐம்பத்தோ ரட்சரம் மந்திரமாய் நவின்ற
ஆறுமுக சாமி ஐயா! -5

குமரிமுனை மாயியும் கோவலூர் ஞானியும்
கொண்டாடுந் தேவ தேவா!
குழந்தையென முன்வந்து ஞானியென உள்நின்று
குருவாக ஆண்ட வேதா!
அமைதிநிலை காணாமல் அலைபாயும் உள்ளத்தை
அரைநொடியில் வென்ற நாதா!
அதுதெய்வம் இதுதெய்வம் எதுதெய்வம் என்னவே
அறியாமல் திகைத்தபோது
சமநிலையில் வாழ்கின்ற உள்ளமே தெய்வமாய்ச்
சாற்றிய ஞான குருவே
சாகா வரம்பெற்ற சச்சிதானந்தமே!
ஆறுமுக சாமி ஐயா! -6

நாயாகிப் பேயாகிப் பகலென்றும் இரவென்றும்
நாடாமல் திரிந்த தேவே!
நல்லவரின் உள்ளத்தில் சொல்லாமல் குடிகொள்ளும்
நலமான அன்பர் கோவே!
தாயாகிக் குடிமக்கள் நோயுற்ற துன்பங்கள்
தான்கொண்டு தீர்த்த வேந்தே!
தருமங்கள் செய்வாரின் கருமங்கள் எல்லாமும்

தழலினில் தீய்த்த மன்னா!
சேயாக எனையாண்டு கோட்டையூர் எழுந்தருளிச்
சித்துவிளை யாடும் அப்பா!
செகமெலாம் கொண்டாடும் தேவனே! வேலனே!
ஆறுமுக சாமி ஐயா! -7

என்னைநீ ஆண்டதும் உன்னைநான் கண்டதும்
எவ்வாறு பாடு வேனோ!
என்மனைவி என்மக்கள் என்சுற்றம் எல்லாமும்
எப்போதும் வாழ்த்து வோமே!
உன்னைநீ உணர்ந்தபின் உண்மைநிலை காணென்ற
உபதேசம் மறக்க லாமோ?
உன்திறம் சொல்லுதல் உன்புகழ்பாடுதல்
ஒருநாவால் முடிவ தொன்றோ?
பின்னரும் உலகினில் தோன்றுவேன் என்றனை
பித்தனேன் காணு வேனோ?
பெருமைபெற ஆட்கொண்ட பேரருள் ஞானியே
ஆறுமுக சாமி ஐயா! -8

தாயாரின் உதரத்தில் ஐயிரண்டு திங்களாய்த்
தடுமாறி வெளியில் வந்தால்
தரணியிற் படுதொல்லை கொஞ்சமோ நஞ்சமோ
தமிழினால் நவில லாமோ!
சேயாகித் துயிலாகி நோயாகிப் போனதோ
சென்மத்தில் மூன்று பாகம்!
சிறப்பான ஓர்பாகம் அதுவுமோ நம்மையே
சிக்கலில் தவிக்க வைக்கும்!
பேயனேன் எப்போது பிறவியின் பயனினைப்
பெறுவனோ அறிந்தி லேனே!
பிரணவம் உணர்த்திய பேசரிய தேவனே!
ஆறுமுக சாமி ஐயா! -9

நல்லவர்கள் எனைநாட அல்லவர்கள் பகைமாற
நடக்கும்முறை காட்ட வேண்டும்!
நானென்னும் அகங்காரம் எனதென்னும் மமகாரம்
நாடாமல் அருள வேண்டும்!
அல்லென்றும் பகலென்றும் பாராமல் எனைநாடும்
அன்பருக் குழைக்க வேண்டும்!
அறிவாலும் அன்பாலும் எல்லோரும் போற்றவே
அநுதினம் வாழ வேண்டும்!
சொல்லாமல் நீசொன்ன சூட்சுமப் பொருளைநான்
சுகம்பெறக் காண வேண்டும்!
சோதியாய் எழுந்தருளும் தூயனே! நேசனே!
ஆறுமுக சாமி ஐயா! – 10

என்றென்றும் மாறாத அன்புநிறை வழியிலே
என்வாழ்வு செல்ல வேண்டும்!
எப்போதும் அடியாரின் திருவடி நீழலில்
இன்பமாய் வாழவேண்டும்!
துன்மார்க்க ரானாலும் துன்பமென வந்திட்டால்
துவள்கின்ற நெஞ்சு வேண்டும்!
துயரங்கள் மலையாக வந்தாலும் அருளினால்
தூசாக்கும் வலிமை வேண்டும்!
நன்மார்க்க நெறிவாழும் நகரத்தார் நிறைகின்ற
நலமான கோட்டை யூரில்
நயப்புடன் சமாதிகொண் டருள்கிற சித்தனே!
நாதனே! ஆறுமுக தேவே! – 11

பணிக்காக வாழ்கின்ற பக்திமனம் என்றென்றும்
பரமனே வாய்க்க வேண்டும்!
பழியாளர் கோடிபணம் குவித்தாலும் விரும்பாத
பண்பான திறமை வேண்டும்!
அணியாக எதிர்த்தாலும் அறநெறியில் மாறாத

ஆற்றலெனக் கருள வேண்டும்!
அண்டினார் தமக்கெலாம் அணுவேனும் நன்மையே
அநுதினம் செய்ய வேண்டும்!
தணியாத காதலால் தனவணிகர் வாழ்கின்ற
தருமம்நிறை கோட்டை யூரில்
சமாதி கொண் டெழுந்தருளி சகலமும் தந்தருளும்
சக்தியே! ஆறுமுக தேவே! –12

வஞ்சனைகள் செய்வோரின் அருகினில் செல்லாத
வரமெனக் கருள வேண்டும்!
வயதான காலத்தும் தயவொன்றும் நாடாத
வாழ்க்கையே அமையவேண்டும்!
தஞ்சமென வருவோரின் குறையினைக் களையவோர்
தரமெனக் கருள வேண்டும்!
தருமநெறி பொய்க்காமல் அதர்மநெறி நிலைக்காமல்
தக்கநெறி உணர்த்த வேண்டும்!
பஞ்சமது வந்தாலும் செல்வமது குறையாமல்
பசிபோக்கும் நகரமக்கள்
பசுமையாய் வாழ்கின்ற கோட்டையூர் எழுந்தருளும்
பரமனே! ஆறுமுக தேவே! –13

நாளொன்று போனாலும் நினைவொன்று மாறாமல்
நானென்றும் வாழ வேண்டும்!
நாயென்றும் பேயென்றும் நமரங்கள் சொன்னாலும்
நாதனை நினைக்க வேண்டும்!
கோளென்ன வந்தாலும் கூற்றென்ன செய்தாலும்
குலையாத நெஞ்சு வேண்டும்!
கோணாத மனையாளும் குறையாத மக்களும்
கூடியே நிற்க வேண்டும்!
ஆளென்னத் தந்தாலும் ஆணவம் இன்றியே
அடக்கமாய் ஆள வேண்டும்!

அழகுதவழ் சக்திநகர் அருகினில் உறைகின்ற
ஐயனே! ஆறுமுக தேவே! -14

மரணத்தை அறிந்தவா! மாயவுடல் அடக்கவோர்
மண்ணினை உரைத்த தேவா!
மனிதவுடல் கொண்டுநீ சித்துவிளை யாடிய
மகிமையைப் பாடு வேனா!
நரகத்தை உலகத்தின் வாழ்க்கையில் கண்டவர்
நலமுடன் வாழ ஆண்டாய்!
நன்றான மெய்ப்பொருள் ஒன்றான தெதுவென்று
நயனத்தால் அறிவு றுத்தினாய்!
வரத்தினால் சிறந்தவர் வளத்தினால் நிறைந்தவர்
வாழ்கின்ற கோட்டையூரில்
வனப்பான சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
வாணனே! ஆறுமுக தேவே! -15

கண்டவரை அன்பாலே சாந்தமென ஈர்க்கின்ற
கருணைபொழி ஈர விழிகள்!
காலளவு நெடுஞ்சட்டை! கையளவு பிணிப்புண்ட
கனமான சடையின் கற்றை!
தண்டமொரு கையிலே அக்கமணி கழுத்திலே
தளராத மெய்யின் வித்தை!
தானாக வந்தன்றிப் பசிக்காகச் செல்லாத
தருமநெறி வாங்கு பிச்சை!
எண்டிசையும் நொடிப்பொழுதில் வலமாக வந்துமே
எளியனாய் வாழ்ந்த வாழ்க்கை!
அவையெலாம் கொண்டவா! இன்றெனை ஆண்டவா!
ஈசனே! ஆறுமுக தேவே! -16

அட்டமா சித்தியால் ஆனந்த வாரியை
அடியவர் உளம்நிரப்புவாய்!
ஆணவப் பேயினால் அதிகாரம் செய்யாமல்

அனுதினம் வாழ அருள்வாய்!
எட்டெட்டு வித்தையும் அறியாத மூலத்தை
இமைப்பொழுதில் அறிவு றுத்துவாய்!
எத்துன்ப மானாலும் உன்னிடம் முறையிடின்
எரிவீழ்ந்த பஞ்சு செய்வாய்!
தொட்டிட்ட பொருளெலாம் துலங்கவே காட்டுவாய்
துரிய நிலை கடந்த நாதா!
தொன்மைமிகு கோட்டையூர் நன்மைமிக எழுந்தருளும்
சோதியே! ஆறுமுக தேவே! – 17

தருமநெறி பின்செல்ல அதர்மநெறி முன்செல்லத்
தடம்புரளும் மனித வாழ்க்கை
தயாவான தத்துவம் தங்குமிடம் இன்றியே
தரணியில் ஏங்கி நிற்கக்
கருமநெறி பொய்யென்று கண்டவழி மெய்யென்று
கயவர்கள் ஓங்கி நிற்கக்
காலத்தை நோவதா கடவுளை நோவதா
கருத்தின்றி மனிதர் வாட
உரியநெறி இதுவென்றும் உண்மைநெறி இதுவென்றும்
உணர்த்தியே நிறைந்த நாதா!
உயர்வான சக்திநகர் அருகினில் உறைகின்ற
ஒளியான ஆறுமுக தேவே! – 18

நால்வேத நெறிகளும் சன்மார்க்க வழிகளும்
நவின்றவோர் மூல வித்தை
நாவினால் சொல்லாமல் அருளினால் உளத்தினில்
நன்குநீ பதிய வைத்தாய்!
பால்போலும் மொழியினால் பனிபோலும் விழியினால்
பாவியேன் உளம்பு குந்தாய்!
பாதார விந்தத்தை நாவாரப் போற்றுதல்
பைந்தமிழ்க் கேற்ற தாகும்!

சேல்போலும் விழியினார் வாள்வாங்கு தோளினார்
சிறந்தோங்கு கோட்டை யூரில்
சித்தமுடன் சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
சேயனே! ஆறுமுக தேவே! -19

வைகாசித் திங்களில் விசாகநன் னாளினில்
வாழ்நாள் முடிப்ப னென்றே
வரலாறு சொன்னது போலவே அடங்கினாய்
வாழ்நாளில் மறப்ப தொன்றோ!
பைசாச வித்தையோ பொய்யான சித்துவோ
பயிற்றியே வாழாத தேவா!
பச்சிளங் குழவிக்கும் குழவியாய் வாழ்ந்திட்ட
பரமனே தூய நாதா!
மெய்யான அன்பர்கள் ஒன்றாக வந்திங்கு
மேலான பூசை செய்ய
மேவியே கோட்டையூர் சமாதிகொண் டருள்கின்ற
நேயனே! ஆறுமுக தேவே! -20

ஆறுமுக சாமிஓம் ஆறுமுக சாமி
ஆண்டவனாய் வந்தவனே ஆறுமுக சாமி -1
வேண்டுவரம் தந்தருள்வாய் ஆறுமுக சாமி
வினைகளையே பொசுக்கிடுவாய் ஆறுமுக சாமி -2

சமாதிநிலை அறிந்தவனே ஆறுமுக சாமி
சக்திநகர் ஆண்டவனே ஆறுமுக சாமி -3
நான்சமாதி கொண்டஇடம் ஆறுமுக சாமி
நகரமென உரைத்தவனே ஆறுமுக சாமி -4

மூதேவி உபாசனையே ஆறுமுக சாமி
முகமலர்ந்து ஏற்றவனே ஆறுமுக சாமி -5
யார்துயரம் சொன்னாலும் ஆறுமுக சாமி
தார்போலப் பெற்றவனே ஆறுமுக சாமி -6

ஆண்டியென வந்தவனே ஆறுமுக சாமி
ஆண்டவனாய் நின்றவனே ஆறுமுக சாமி -7
எச்சிலிலை தின்றவனே ஆறுமுக சாமி
என்றைக்கும் மெய்ப்பொருளே ஆறுமுக சாமி -8

ஐம்பத்தோ ரட்சரமே ஆறுமுக சாமி
அறிவினுக்குத் தந்தவனே ஆறுமுக சாமி -9
விராலிமலை குகையினிலே ஆறுமுக சாமி
வேல்வைத்து வழிபட்டாய் ஆறுமுக சாமி -10

விராலிமலை வீற்றிருக்கும் ஆறுமுக சாமி
வினைகளைந்த சித்தனவன் ஆறுமுக சாமி -11
வெயிலென்ன மழையென்ன ஆறுமுக சாமி
விளையாட்டாய் ஏற்றிட்டாய் ஆறுமுக சாமி -12

உலகுய்ய வந்தவனே ஆறுமுக சாமி
உள்ளத்தில் நிறைந்தவனே ஆறுமுக சாமி -13
வாசலினைத் தேடிவந்தாய் ஆறுமுக சாமி
வாழ்வெல்லாம் நாடிநிற்பாய் ஆறுமுக சாமி -14

கோடிமக்கள் கூடிவந்து ஆறுமுக சாமி
குறைகளையப் பாடிடுவார் ஆறுமுக சாமி -15
மழைபொழிய வேண்டுமப்பா ஆறுமுக சாமி
மன்பதைகள் உய்ய வேண்டும் ஆறுமுக சாமி -16

காடுவயல் விளைய வேண்டும் ஆறுமுக சாமி
கவலையெலாம் பறக்க வேண்டும் ஆறுமுக சாமி -17
சந்நிதிக்கு வந்தாலே ஆறுமுக சாமி
சங்கடங்கள் தொலையுமப்பா ஆறுமுக சாமி -18

பால்பழங்கள் அபிஷேகம் ஆறுமுக சாமி
பக்தியுடன் நடத்துகின்றோம் ஆறுமுக சாமி -19
ஏறும்வழி காட்டிடுவாய் ஆறுமுக சாமி
எல்லாமும் உன்னருளே ஆறுமுக சாமி -20

காவியுடை தரித்தவரும் ஆறுமுக சாமி
காணவந்தார் உன்கோயில் ஆறுமுக சாமி –21

என் மனைவி என்மக்கள் ஆறுமுக சாமி
எல்லாமும் உன்னுடைமை ஆறுமுக சாமி –22

கோட்டையூரில் எழுந்தருளும் ஆறுமுக சாமி
குலம்விளங்க அருள்பொழிவாய் ஆறுமுக சாமி –23

ஆறுமுக சாமிஓம் ஆறுமுக சாமி
ஆண்டவனாய் வந்தவனே ஆறுமுக சாமி –24



### வாழ்க்கைத் தத்துவம் :

நல்லாவின் பால்முழுதும் கன்றுக் கில்லை;
நறும்பூவின் மணம்முழுதும் சோலைக் கில்லை!
நெல்லாகும் கதிர்முழுதும் நிலத்துக் கில்லை;
நிறைகின்ற நீர்முழுதும் குளத்துக் கில்லை!
பல்லாரும் கனிமுழுதும் மரத்துக் கில்லை;
பண்ணரம்பின் இசைமுழுதும் யாழுக் கில்லை!
எல்லாமே பிறர்க்குழைக்கக் காணு கின்றேன்;
என்வாழ்வும் பிறர்க்கென்றே இருத்தல் வேண்டும்!

– அறிஞர் வ.சுப. மாணிக்கம்

# அத்தியாயம் – 3

### பதிக விளக்கமும், பாராயண முறையும் :

**பாராயண முறை :**

ஆறுமுகசாமி பூமா தேவியின் அம்சம், அவதாரம் என்றே சொல்லலாம்.

“முன்பிறந்த நாயகியாம் மூதேவி (மூத்ததேவி பூமா தேவி) வாசத்தை முக மலர்ந்து ஏற்றதேவா”.

மூதேவி உபாசனையே ஆறுமுகசாமி முகமலர்ந்து ஏற்றவனே ஆறுமுகசாமி என்ற பதிகவரிகளால் நாம் அறியலாம்.

உண்மையில் பதிகத்தை பாடியது பூமாதேவியின் அம்சமாகிய ஆறுமுகசாமியே என்பதை நான் என் அனுபவத்தில் உணர்கிறேன். பதிகத்தின் ஒவ்வொரு வார்த்தையும் பொருள் பொதிந்தவை. நவில்தொறும் நூல் நயம் போலும் என்பதற்கேற்ப, ஒவ்வொரு முறை பதிகத்தை படிக்கும்போதும், புதிய கருத்துக்கள் புலப்படும்.

பதிகத்தின் மூலம் ஆறுமுகசாமி தம்மை முழுமையாக வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

பதிகங்கள் பொழிப்புரை என்றால் தொடர்ந்து வருகிற 24 அடி சிந்து அதன் சுருக்கம் (Summary)

பதிகத்தையும், சிந்து வரிகளையும் தினசரி பாராயணம் செய்ய வேண்டும். பதிகம் பாராயணம் செய்ய இயலாத நிலையில் 24 சிந்து அடிகளையாவது பாராயணம் செய்ய வேண்டும். குறைந்தது 48 நாட்கள் ஒரு மண்டலம் பாராயணம் செய்ய வேண்டும்.

மனம் ஒன்றி பிழையின்றி பாராயணம் செய்ய வேண்டும்.

ஆரம்பத்தில் பதிகப் புத்தகத்தை பார்த்தே பாராயணம் செய்ய வேண்டும்.

ஒரு மண்டலம் பாராயணம் செய்யும் போது பதிகங்களை பாராமலேயே நினைவிலிருந்தே சொல்லுகின்ற நிலை ஏற்படும்.

அந்த நிலை ஏற்படும் போது – நீங்கள் ஆறுமுகசாமிக்கு அருகில் வந்து விட்டீர்கள் என்று பொருள் அப்போது நீங்கள் வேண்டும் வரம் தந்திடுவார். வாரத்தில் ஒருநாள் குருவாரத்தில் வியாழக்கிழமை குருஹோரையில் இரவு 8 மணி முதல் ஒருமணி நேரம் ஆறுமுகசாமியை வழிபடுவதை வழக்கமாக்கி கொள்ள வேண்டும். குருவாரத்தில் வழிபாடு செய்வதுடன் அமாவாசை, பௌர்ணமி நாட்களில் அவசியம் ஆறுமுகசாமியை கசிந்துருகி மனம் ஒன்றி வழிபட வேண்டும். அப்படி வழிபட்டால் சிந்து அடிகளில் கண்டது போல

**வேண்டும் வரம் தந்தருள்வாய் ஆறுமுகசாமி.**

**“வினைகளையே பொசுக்கிடுவார் ஆறுமுகசாமி**

**சந்நிதிக்கு வந்தாலே – ஆறுமுக சாமி**

**சங்கடங்கள் தொலையுமப்பா ஆறுமுகசாமி”**

**வேண்டும் வரங்களை கேளுங்கள் சாமி நிச்சயம் தருவார்**

**“சந்நிதிக்கு வாருங்கள் உங்கள் சங்கடங்களைத் தொலைப்பார்”**

இவைகள் சத்தியமான வார்த்தைகள் நான் என் அனுபவத்தில் உணர்ந்து, அறிந்தவை, நீங்கள் வேண்டும் வரங்களை மட்டுமல்ல உங்கள் வினைகளையே – கர்மவினை போன ஜென்மத்தில் செய்த பாவங்கள் அதனால் இந்த ஜென்மத்தில் அனுபவிக்கின்ற உடல் நோய், வாழ்க்கையில் படுகின்ற கஷ்டங்கள், சிரமங்களை எல்லாம் நீக்குவது அல்ல பொசுக்கிடுவார் – சிந்து வரிகளை நினைவு கூறுங்கள் வினைகளையே பொசுக்கிடுவார் அவர் வரலாற்றை படித்துப் பாருங்கள். அவர் கர்ம வினை நீக்கிய அற்புத நிகழ்ச்சிகளை அறியலாம். இதனை ஐந்து மற்றும் ஆறாம் அத்தியாயம் – 5, 6 “கர்ம வினை நீக்கும் அற்புத சித்தர்” கோட்டையூர் எச்சில் பொறுக்கி ஆறுமுகசாமி என்ற கட்டுரைகள் மூலம் அறியலாம். எப்படி தாயானவள் தன் மக்கள் நோயுற்றால் அதற்காக தான் பட்டினி கிடந்து தான் ஏற்று நோய் தீர்ப்பாளோ, ஆறுமுக சித்தரும் தன் பக்தர்களின் நோய்களை தான் ஏற்று நோய் தீர்ப்பார் என்பதை பதிகம் 7 – ல்.

"தாயாகி குடிமக்கள் நோயுற்ற துன்பங்கள்
தான் கொண்டு தீர்த்த வேந்தே"

சேயாக எனையாண்டு கோட்டையூர் எழுந்தருளிச் சித்துவிளை யாடும் அப்பா! என்ற வரிகளால் அறியலாம்.

உண்மைதான் என்னை சேயாக ஆண்டு, சித்து விளையாடி வருகிறார்.

என்னை நீ ஆண்டதும் உன்னை நான் கண்டதும் எவ்வாறு பாடுவேனோ! என்ற பதிக வரிகளுக்கு ஏற்ப என்னை அவர் ஆண்டதை பாட இயலாது.

எப்படி தாயானவள் தன் மக்களிடம் எதையும் எதிர்பாராது, தன் மக்கள் தன்னை வந்து பார்ப்பதிலேயே மகிழ்ச்சி அடைவாளோ, அவ்வாறே பூமாதேவியின் அம்சமாகிய ஆறுமுகசாமியும் தன் குழந்தைகளாகிய தன் பக்தர்கள் தன்னை குருவாரத்தில் ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஆறுமுகசாமி பருவ வழி பாடு செய்ய வரும் போது சௌக்கியமாக தங்கி செல்லவும் பசியாறவும் ஏற்பாடு செய்துள்ளார். கடந்த 20 ஆண்டுக்கு மேலாக பூமா தேவி அருளால் இந்த அரும் பணி தொடர்கிறது. இது போன்று சித்தர் ஆலயத்தில் இரவு தங்கி சௌகரியமாக பசியாறி வழிபட்டுச் செல்வது எங்கும் நாம் காண இயலாத ஒன்று.

## மூன்றாம் பகுதி :

### பதிக விளக்கம் :

பதிகம் பாராயணம் செய்யும் வழிமுறைகளும் பதிகம் மூலம் ஆறுமுக சுவாமி சித்தரென்பதையும் பதிகங்களிலிருந்து அவரை பற்றி நாம் அறிந்து கொள்ள உதவும் வினாக்களும் அவற்றுக்கான விடைகளும்.

1. ஆறுமுகசாமி யார்?
2. நாயாகி பேயாகி பகலென்றும் இரவென்றும் பாராமல் நாடு முழுவதும் திரிந்த ஆறுமுக சாமி விராலிமலை குகையிலே ஏன் குடி கொண்டார்?
3. 30 ஆண்டுகளுக்கு மேலாக விராலிமலை குகையிலே வீற்று

இருந்த ஆறுமுகசாமி கோட்டையூரிலே ஏன் தன் சமாதியை அமைத்துக் கொண்டார்?

4. ஸ்ரீ ஆறுமுகசாமி சித்தர் என்பதை எவ்வாறு அறியலாம்?
5. ஸ்ரீ ஆறுமுக சாமியின் சிறப்பும் மகிமையும் தான் என்ன?
6. ஸ்ரீ ஆறுமுகசாமி காட்டிய உண்மையான தெய்வம் எது? உபதேசித்த மந்திரம் என்ன?
7. ஸ்ரீ ஆறுமுக சாமியிடம் நாம் வேண்ட வேண்டியவை என்ன?

**கேள்வி என் : 1 – ஆறுமுக சாமி உண்மையில் யார்?**

**பதிகம் – 3 :** முன் பிறந்த நாயகியாம் மூதேவி (மூத்ததேவி) வாசத்தை (பூமாதேவி) முகமலர்ந்து ஏற்ற தேவா!

**காவடி சிந்து 5 – ல் :** மூதேவி உபாசனையே ஆறுமுக சாமி முகமலர்ந்து ஏற்றவனே ஆறுமுக சாமி பாடல் வரிகளில் இருந்து ஆறுமுக சாமி **பூமா தேவியின் அம்சம் / அவதாரம்** என்பதை அறியலாம்.

**கேள்வி என் : 2 – நாயாகி பேயாகி பகலென்றும் இரவென்றும் பாராமல் நாடு முழுவதும் திரிந்த ஆறுமுக சாமி விராலிமலை குகையிலே ஏன் குடி கொண்டார்?**

**பதிகம் 1 :** கொண்டாடக் கொண்டாடக் குறையெல்லாம்
மாய்க்கின்ற குருவாக வந்த ஞானி!
குறையுடைய விராலிமலை முருகனின் சாபத்தைக்
**கொண்டு வாழ் வித்த மேலோன்!**

**பதிகம் 2:** பீடுபெறும் விராலிமலை நீடுபுகழ் பெற்றிடப்
புகலிடம் கொண்ட தெய்வம்!

**பதிகம் 3:** முருகனருள் பெற்றுயர் விராலிமலை தன்னிலே
முத்தி நிலை சொற்ற கோவே!

**சிந்து 10 :** விராலிமலை குகையினிலே ஆறுமுக சாமி
வேல் வைத்து வழிபட்டாய் ஆறுமுக சாமி

**சிந்து 11:** விராலிமலை வீற்றிருக்கும் ஆறுமுக சாமி
வினைகளைந்த சித்தனவன் ஆறுமுக சாமி

குறையுடைய விராலிமலை முருகனின் சாபத்தைக் கொண்டு வாழ்விக்கவும் பீடுபெறும் விராலிமலை நீடுபுகழ் பெற்றிடவும், ஆறுமுகசாமி விராலிமலையில் அமர்ந்தார் என்பதை நாம் அறியலாம்.

<u>கேள்வி எண் : 3 - 30 ஆண்டுகளுக்கு மேலாக விராலிமலை குகையிலே வீற்று இருந்த ஆறுமுகசாமி கோட்டையூரிலே ஏன் தன் சமாதியை அமைத்துக் கொள்ள சித்தம் கொண்டார்?</u>

சேல் போலும் விழியினார் வாள்வாங்கு தோளினார்
சிறந்தோங்கு கோட்டையூரில்
சித்தமுடன் சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
சேயனே! ஆறுமுக தேவே!

**கோட்டையூரில் சமாதி கொள்ள ஆறுமுகசாமி சித்தம் கொண்டார் என்பதை காட்டும் உயில் சாசனம் :**

சேல்போலும் விழியினார் வாள்வாங்கு தோளினார்
சிறந்தோங்கு கோட்டையூரில்
சித்தமுடன் சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
சேயனே! ஆறுமுக தேவே!

கோட்டையூரில் சமாதி கொள்ள சித்தம் கொண்டார் என்பதை14.5.1981 ஆம் தேதியில் ஒரு உயில் சாசனம் எழுதிவைத்து உறுதி செய்துள்ளார். மேற்படி உயில் சாசனத்தில் அவர் எழுதிய வாசகங்கள்

எச்சில் பொறுக்கி ஆறுமுக சாமியாகிய நான் இன்று துன்மதி வைகாசி மாதம் 1 - ம் தேதி இங்கீலீஷ் 1981 வருடம் மே மாதம் 14 - ம் தேதி என சொல் படியும், சுய நினைவுடனும் எழுதி வைத்துள்ள உயில் சாசனம் என்னவென்றால் கடந்த சில தினங்களாக என் உடல்நிலை தவநிலை காரணமாக சரியில்லாமல் இருக்கிறபடியாலும் என் உயிர் மூச்சு எச்சமயத்திலும் நின்று விடுமோ என்கின்ற காரணத்தினாலும் இந்த உயிலின்படி என்மூச்சு பிரிந்து விடுமேயானால் என் பூத உடலை ராமனாதபுரம் மாவட்டம் காரைக்குடி அருகிலுள்ள கோட்டையூரில் அழ.சிதம்பரம் அவர்களின் ராம.அழ.சித. வீட்டிற்க்கு எடுத்துச் சென்று

கோட்டையூர் எல்.பி.பெரியகருப்பன் செட்டியார் மகன்களான எல்பி அழகப்பன் எல்பி லெஷ்மணன் எல்பி வீரப்பன் எல்பி அண்ணாமலை மற்றும் அவர்கள் குடும்பத்தார் முன்னிலையிலும் மற்றும் எனது சிஷ்டர்கள், முன்னிலையிலும் என் உடலுக்கு நல்லடக்கம் செய்ய சம்மதிக்கிறேன். இந்த ஏற்பாட்டை என் மனப்பூர்வமாக சுய நினைவுடன் சொல்லி இந்த உயிலை எழுதி வைக்கிறேன்.

மேற்படி உயில் சாசனத்தில் அவரது அண்ணன் மகன் கனகரெத்தினம் உட்பட ஆறுபேரிடம் சாட்சி கையெழுத்து வாங்கி சுவாமியை பார்க்க சென்ற என் தாயார் வசம் ஒப்படைத்துள்ளார்.

மேற்படி உயில் சாசனத்தில் இருந்து ஆறுமுகசாமி கோட்டையூரில் உள்ள ராம.அழ.சித. வீட்டிற்கு எடுத்து சென்று சுவாமி உடலை நல்லடக்கம் செய்ய வேண்டுமென்று 35 ஆண்டுகளுக்கு முன்பே சித்தம் கொண்டார் என்பதை நாம் அறியலாம். கோட்டையூருக்கு வந்து குறிப்பாக என் வீட்டிற்க்கு எடுத்துச் சென்று அவரது சமாதியை கோட்டையூரில் அமைக்க வேண்டும் என்பது ஆறுமுக சுாவமிகள் ஓர் இரவில் எடுத்த முடிவல்ல. பத்து ஆண்டுகளுக்கு மேலாக என்னை பல சோதனைக்களுக்கு ஆளாக்கி அவரை நான் சமாதி அமைத்து கொண்டாடுவேன் என்று உறுதி செய்த பின்பு எனக்கு “குருவும் கொளையும்” “ பாலும் பழமும்” கொடுத்து உபதேசம் செய்வித்து அதன் பின்னர் எடுத்த முடிவாகும்.

ஆறுமுக சாமி வைகாசி திங்களில் விசாக நன்னாளினில் வாழ்நாள் முடிப்பன் என்று அருட் சுவடியாம் மீனாட்சி நாடி மூலம் எனக்கு அறிவுறுத்தப்பட்டு சுவாமி சமாதி அடையும் சமயம் நான் உடனிருந்து அவர் உத்தரவுப்படியே அவர் உடலை என்வீட்டிற்கு எடுத்து வந்து சுவாமியை சமாதியில் வைத்து அங்கு அவருக்கு சமாதி ஆலயம் அமைக்கவும் லிங்கபிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்யும் நற்பேரும் பாக்யமும் என் தாயாரின் தவப்பயனாலும் எனது பூர்வ ஜென்ம புண்ணியத்தாலும் எனக்கு கிடைத்தது. இந்த பெரும் பேற்றை எனக்கு நல்கிய திருவருளுக்கு என் நன்றியை உரிய தாக்குகிறேன்.

பதிகம் இருபதில் வைகாசி திங்களில் விசாக நன்னாளில் வாழ்நாள் முடிப்பன் என்று வரலாறு சொன்னது போலவே அடங்கினாய் என்ற பதிகவரிகளை நினைவு கூறுங்கள்.

ஆறுமுக சுவாமி தன் சமாதியை கோட்டையூரில் அமைத்துக் கொள்ள சித்தம் கொண்டதற்கு காரணம் கோட்டையூர் அருட் கவிஞர் பாடுவார் முத்தப்பர் அருட் கவிஞர் "அரு.சோ." போன்றோரால் பாடப்பெற்ற ஊர், ஏன் பாடல் பெற்ற ஸ்தலம் என்றே சொல்லலாம்.

அருட்கவிஞர் பாடுவார் முத்தப்பர் கோட்டையூரை சிறப்பித்து இரண்டு பாடல்கள் பாடியுள்ளார்.

"கோட்டையூர் மாவணிகர் கொண்டு விற்றுக் கொண்டு வரும்
ஏட்டையே யாங்கண்டு யியம்பினோம் – கோட்டையூர்
நாட்டை விட்டுச்சென்ற நகரத்தார் யாவரும் பொன்
கோட்டையுடன் வருவார் கொண்டு
"நீர்பெருகி யூற்றெடுக்கும் நீண்ட புகழ் கோட்டை
யூர் பெருகி யூற்றெடுக்கும் ஊருணிகள் – சீர்பெருகி
அன்னவோ, ரன்ன அருஞ்செல்வம் ஊற்றெடுக்கும்
பின்னும் ஒருழி பீறிட்டு"

அருட்கவிஞர் "அரு.சோ" எழுதிய பஞ்ச ரத்ன கீர்த்தனைகள்

**கோட்டையூர் என்றாலே குடியிருக்கும் செல்வமெலாம்
கொடிகள் நாட்டும்
குலமக்கள் வாழ்கின்ற கோட்டையிலோர் கொடியாகக்
குன்றம் வந்தார்.**

என்று கோட்டையூரை சிறப்பிக்கிறார்.

அருட்கவிஞர் அரு.சோ. தனது 96 ஊர் பாதயாத்திரையில் 13.7.2014 கோட்டையூர் வந்த போது கோட்டையூரைப் பற்றி கோட்டையூர் நகரத்தார்கள் கல்விக் கண் திறந்தவர்கள். கலைக் கோயில் கண்டவர்கள். செல்வத்தில் மிக்கவர்கள். திருப்பணிகள் செய்தவர்கள். சிறந்தோங்கி வாழ்பவர்கள் என்று கோட்டையூரை சிறப்பித்து தனது பாதயாத்திரையை நிறைவு செய்கிறார்.

**பார்வை :** நகரத்தார் 96 ஊர்ப் பாதயாத்திரை திருவாசகம் முற்றோதல் புத்தக ஆசிரியர் அரு.சோ. பொன்முடி பதிப்பகம் முதல் பதிப்பு : 2016 ஆகஸ்டு.

பெரும் புலவர் இளவரசு ஆறுமுக சுவாமி பதிகத்தில் சுமார் 10 பதிகங்களில் கோட்டையூரையும் அருகமைந்த சக்தி நகரையும் சிறப்பிக்கிறார்.

**பதிகம் 2 :** அடியவர்கள் சிறந்தோங்கு கோட்டையூர் எழுந்தருளும் ஆறுமுக சாமி ஐயா!

**பதிகம் 4 :**

அழகான மாளிகைகள் அன்புநிறை உள்ளங்கள் அவற்றினால் கீர்த்தி மிக்க
அறம்வளரும் திருநகராம் கோட்டையூர் எழுந்தருளும் ஆறுமுக சாமி ஐயா!

**பதிகம் 11 :**

நன்மார்க்க நெறிவாழும் நகரத்தார் நிறைகின்ற
நலமான கோட்டையூரில்
நயப்புடன் சமாதிகொண் டருள்கின்ற சித்தனே!
நாதனே! ஆறுமுக தேவே!

**பதிகம் 12 :**

தணியாத காதலால் தனவணிகர் வாழ்கின்ற
தருமம்நிறை கோட்டை யூரில்
சமாதி கொண் டெழுந்தருளி சகலமும் தந்தருளும்
சக்தியே ! ஆறுமுக தேவே!

**பதிகம் 13 :**

பஞ்சமது வந்தாலும் செல்வமது குறையாமல்
பசிபோக்கும் நகர மக்கள்
பசுமையால் வாழ்கின்ற கோட்டையூர் எழுந்தருளும்
பரமனே! ஆறுமுக தேவே!

பதிகம் 14 :

அழகுதவழ் சக்திநகர் அருகினில் உறைகின்ற
ஐயனே! ஆறுமுக தேவே!

பதிகம் 15 :

வரத்தினால் சிறந்தவர் வளத்தினால் நிறைந்தவர்
வாழ்கின்ற கோட்டையூரில்
வனப்பான சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
வாணனே! ஆறுமுக தேவே!

பதிகம் 19 :

சேல்போலும் விழியனார் வாள்வாங்கு தோளினார்
சிறந்தோங்கு கோட்டை யூரில்
சித்தமுடன் சமாதிகொண் டருள்கின்ற நாதனே!
சேயனே! ஆறுமுக தேவே!

பதிகம் 20 :

மெய்யான அன்பர்கள் ஒன்றாக வந்திங்கு
மேலான பூசை செய்ய
மேவியே கோட்டையூர் சமாதிகொண் டருள்கின்ற
நேயனே! ஆறுமுக தேவே!

கேள்வி எண் : 4 - ஸ்ரீ ஆறுமுகசாமி சித்தர் என்பதை எவ்வாறு அறியலாம்?

பதிகம் 7 :

சேயாக எனையாண்டு கோட்டையூர்
எழுந்தருளிச் சித்துவிளையாடும் அப்பா!
செகமெலாம் கொண்டாடும் தேவனே! வேலனே!
ஆறுமுக சாமி ஐயா!

பதிகம் 11 :

நயப்புடன் சமாதி கொண் டருள்கின்ற சித்தனே!
நாதனே! ஆறுமுக தேவே!

**பதிகம் 15 :**

**மனிதவுடல் கொண்டுநீ சித்துவிளை யாடிய**
**மகிமையைப் பாடு வேனா!**

**பதிகம் 17 :**

**அட்டமா சித்தியால் ஆனந்த வாரியை**
**அடியவர் உளம் நிரப்புவாய்!**

மேற்கண்ட பதிக வரிகள் மூலம் ஆறுமுகசாமி சித்தர் என்பதை நாம் அறியலாம்.

**கேள்வி எண் : 5 - ஆறுமுகசாமியின் சிறப்பும் மகிமையும் தான் என்ன?**

ஆறுமுகசாமி மரணத்தை முன் கூட்டியே அறிந்து வாழ்நாள் முடியும் நாளை உரைத்தவர்.

**பதிகம் 15 :**

**மரணத்தை அறிந்தவா! மாயவுடல் அடக்கவோர்**
**மண்ணினை உரைத்த தேவா!**

**பதிகம் 20 :**

**வைகாசித் திங்களில் விசாக நன்னாளினில்**
**வாழ்நாள் முடிப்ப னென்றே**
**வரலாறு சொன்னது போலவே அடங்கினாய்**
**வாழ்நாளில் மறப்ப தொன்றோ!**

**கேள்வி எண் : 6 - ஸ்ரீ ஆறுமுகசாமி காட்டிய உண்மையான தெய்வம் எது? உபதேசித்த மந்திரம் என்ன?**

**பதிகம் 6 :**

**அதுதெய்வம் இதுதெய்வம் எதுதெய்வம் என்னவே**
**அறியாமல் திகைத்தபோது**
**சமநிலையில் வாழ்கின்ற உள்ளமே தெய்வமாய்ச்**
**சாற்றிய ஞான குருவே.**

பதிகம் 8 :

உன்னை நீ உணர்ந்த பின் உண்மை நிலை காண் என்றி <u>உபதேசம் மறக்கலாமோ!</u>

**கேள்வி எண் : 7 –** ஸ்ரீ ஆறுமுக சாமியிடம் நாம் வேண்ட வேண்டியவை என்ன?

## ஸ்ரீ ஆறுமுக சாமியிடம் நாம் வேண்ட வேண்டியவை

பதிகம் 10 :

நல்லவர்கள் எனைநாட அல்லவர்கள் பகைமாற
நடக்கும் முறை காட்ட வேண்டும்!
நானென்னும் அகங்காரம் எனதென்னும் மமகாரம்
நாடாமல் அருள வேண்டும்!
அல்லென்றும் பகலென்றும் பாராமல் எனைநாடும்
அன்பருக் குழைக்க வேண்டும்!
அறிவாலும் அன்பாலும் எல்லோரும் போற்றவே
அநுதினம் வாழ வேண்டும்!
சொல்லாமல் நீசொன்ன சூட்சுமப் பொருளைநான்
சுகம்பெறக் காண வேண்டும்!

பதிகம் 11:

என்றென்றும் மாறாத அன்புநிறை வழியிலே
என்வாழ்வு செல்ல வேண்டும்!
எப்போதும் அடியாரின் திருவடி நீழலில்
இன்பமாய் வாழவேண்டும்!
துன்மார்க்க ராணாலும் துன்பமென வந்திட்டால்
துவள்கின்ற நெஞ்சு வேண்டும்!
துயரங்கள் மலையாக வந்தாலும் அருளினால்
தூசாக்கும் வலிமை வேண்டும்!

**பதிகம் 12 :**

பணிக்காக வாழ்கின்ற பக்திமனம் என்றென்றும்
பரமனே வாய்க்க வேண்டும்!
பழியாளர் கோடிபணம் குவித்தாலும் விரும்பாத
பண்பான திறமை வேண்டும்
அணியாக எதிர்த்தாலும் அறநெறியில் மாறாத
ஆற்றலெனக் கருள வேண்டும்!
அண்டினார் தமக்கெலாம் அணுவேனும் நன்மையே
அநுதினம் செய்ய வேண்டும்!

**பதிகம் 13 :**

வஞ்சனைகள் செய்வாரின் அருகினில் செல்லாத
வரமெனக் கருள வேண்டும்!
வயதான காலத்தும் தயவொன்று நாடாத
வாழ்க்கையே அமைய வேண்டும்!
தஞ்சமென வருவோரின் குறையினைக் களையவோர்
தரமெனக் கருள வேண்டும்!
தருமநெறி பொய்க்காமல் அதர்மநெறி நிலைக்காமல்
தக்கநெறி உணர்த்த வேண்டும்!

**பதிகம் 14 :**

நாளொன்று போனாலும் நினைவொன்று மாறாமல்
நானென்றும் வாழ வேண்டும்!
நாயென்றும் பேயென்றும் நமரங்கள் சொன்னாலும்
நாதனை நினைக்க வேண்டும்!
கோளென்ன வந்தாலும் கூற்றென்ன செய்தாலும்
குலையாத நெஞ்சு வேண்டும்!
கோணாத மனையாளும் குறையாத மக்களும்
கூடியே நிற்க வேண்டும்!
ஆளென்னத் தந்தாலும் ஆணவம் இன்றியே
அடக்கமாய் ஆள வேண்டும்!

# அத்தியாயம் – 4

## எனது குருநாதர் :

**பேரா.ஏ.எல்.சிதம்பரம், கோட்டையூர்**

"ஒருரையால் வாய்க்கும் உண்மைக்கோர்
அனந்த நூல் கோடி பேசிலென்பேராம் பராபரமே"
– என்பது தாயுமானவர் வாக்கு.

ஞானம் பெற அனந்த நூல் கோடி படிக்க வேண்டுமென்பதில்லை. ஒருரை போதும். "காதறுந்த ஊசியும் வாராது காண் கடைவழிக்கே" என்ற ஒருரையால் கோடிக்கணக்கான செல்வத்தை நொடிப் பொழுதில் துறந்து ஞானம் பெற்றார் பட்டினத்தார். அந்த ஒருரையால் அவருக்கு பூர்வஜென்மத் தொடர்பு நினைவு வந்துவிட்டது. அப்படி பூர்வ ஜென்மத்தை நமக்கு காட்டித் தருபவனே உண்மையான குரு. பூர்வ புண்ணியம் செய்தவர்க்கே அப்படி ஒரு குரு கிடைப்பார். எனது பூர்வ புண்ணியத்தால் எனக்கு அப்படி ஒரு குரு கிடைத்தார். ஏ.என்.கே.சுவாமிகளை, ஜோதிடச் சக்கரவர்த்தி, பசிப்பிணி மருத்துவர் என்றெல்லாம் பலரும் பாராட்டுவார்கள். ஆனால் எனக்கு அவர் 'குருநாதர்'.

சுவாமியை நான் சந்தித்ததையும் "எப்படி அவரது ஒருரையில் எனது பூர்வஜென்ம வாழ்வு நினைவுவர, உலகியல் வாழ்வில் உழன்ற என் வாழ்கை தவவாழ்க்கையாக மாறிற்று" என்பதை சுவாமியின் சதாபிஷேகம் நடைபெறுகின்ற நல்ல நாளில் "எனது குருநாதர்" என்ற இக்கட்டுரை மூலம் தங்களுடன் பகிர்ந்து கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். சுவாமி விவேகானந்தருக்கு ராமகிருஷ்ண பரமஹம்சர் குருவாக வாய்த்தது போல் எனக்கு ஏ.என்.கே சுவாமிகள் குருவாக வாய்த்தார்கள். அது நான் செய்த பூர்வஜென்ம புண்ணியம்.

பிறக்கும் போதே வாயில் சில்வர் கரண்டியுடன் பிறந்தவர் என்று சில செல்வந்தர்களை சொல்லுவார்கள். நானோ பிறக்கும்போதே

கேஸ் கட்டுடன் பிறந்தேன். பிறக்கும் போதே தந்தையை இழந்த நான் எட்டு வயதை எட்டியபோது எனது தந்தை வழி பாட்டனாரால் தொடரப்பட்ட பாகப் பிரிவினை வழக்கு ஒன்றையும் எதிர்கொள்ளும் நிலைக்கு ஆளானேன்.

"சோதனைமேல் சோதனை போதுமடா சாமி
வேதனைதான் வாழ்க்கை என்றால் தாங்காது பூமி"

என்று சோதனைகளை சுமந்து நின்ற சமயத்தில் ஏ.என்.கே.சுவாமி அவர்கள் சென்னை லிங்கி செட்டித்தெருவில் என் நண்பர் ஒருவர் வீட்டில் வந்து தங்கியிருப்பதை அறிந்தேன். "எதைத் தின்றால் பித்தம் தெளியும்" என்று ஏங்கி நின்ற நான் அந்த நண்பர் மூலமாகவே சுவாமியை சென்று சந்தித்து மீனாட்சி சுவடி படிக்க வேண்டி நின்றேன். சுவாமியை நான் சந்தித்த ஆண்டு 1967. சுவாமி சுவடி படிக்க, படிக்க ஊற்றெழும் கண்ணீரால் உடம்பு நனைந்து - பேசமுடியாத ஒரு நிலைக்கு ஆளானேன். சுவாமியும் படிப்பதை நிறுத்தி என்னை ஆசுவாசப்படுத்தி, திருநீறு அணிவித்து படிப்பதை தொடர்ந்தார்கள். நாடியின் வார்த்தைகளில் சொல்வதானால் "அப்பனப்பன் சொத்ததிகம். ஆனாலும் முன்செென்மத்தில் செய்த பாவம் மூளுமே விவகாரம் பால்யம் தொட்டும் என்று நான் இச்செென்மத்தில் படும் கஷ்டம் நான் முன்ஜென்மத்தில் செய்த பாவத்தால் என்பதை அறிந்து கொண்ட எனக்கு அந்த நிமிடமே அகக்கண் திறந்தது. "நல்ல குருநாதன் நம்மை வருத்தியது கொல்வதற்கு அல்ல கொடுவினைகள் போக்குவதற்கு" என்பதை தெரிந்து கொண்ட எனக்கு அன்றே ஞானம் பிறந்தது.

என் கஷ்டங்கள் நீங்க பூர்வஜென்மத்தில் ஜெபித்த சடாட்சர மந்திரத்தை சுவடியில் இருந்து சுவாமிகளே உபதேசிப்பார்கள் என்றும், அதற்கான சக்கரத்தையும் சுவாமிகளே செய்து தருவார்கள் என்றும், அதனைவிடாது ஜபித்துவர "கண்டுமது உச்சமாக ஊறியவுடனே உன்னை எதிர்க்கத் துணிந்தவர்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல்

ஓடி மறைவார், அவர் வம்சாவழியினரை நீ வளர்க்கும் படியாகவே வந்துகூடும்" என்று சுவடியில் உத்தரவானது. மறுநாளே ஏ.என்.கே.சுவாமியை திருப்போரூர் அழைத்துச் சென்று, திருப்போரூர் முருகனை வழிபட்டு, போரூர் கோயிலை ஸ்தாபித்த சிதம்பரசுவாமி சமாதியில் சுவாமியிடமிருந்து சடாட்சர உபதேசமும் - சக்கரமும் பெற்றேன். அன்று முதல் என்னை சிஷ்யனாக ஏற்று இன்று வரை அருள்பாலித்து வருகிறார்கள்.

சுவடியின் உத்தரவுப்படியே நான் மந்திரத்தை தொடர்ந்து ஜபித்துவர என்னை எதிர்க்கத் துணிந்தவர்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓடி மறைந்தார்கள். 1967 ல் இருந்து இன்றுவரை (பிப்ரவரி 2010) கடந்த 43 ஆண்டுகளாக மீனாட்சி சுவடியின் அருளாணைப்படியே - அப்போதைக்கப்போது சுவாமியிடம் உத்தரவு கேட்டு என் ஞான வாழ்வினை தொடர்ந்து வருகின்றேன். ஏ.என்.கே. சுவாமியின் வார்த்தைகளில் சொன்னால் "ஏ.எல்.சி ஒரே நாளில் ஞானியானார்" என்பார்கள். என்னைப் பொறுத்தவரை மீனாட்சி நாடி என்பது ஜோதிட நூல் அல்ல, ஞான நூல். சுவாமியிடம் நான் பெற்ற பேறுகளைச் சொல்ல இக்கட்டுரை போதாது, ஒரு புத்தகம் எழுத வேண்டும். எனது அனுபவங்கள் சிலவற்றை உங்களோடு பகிர்ந்து கொண்டு இக்கட்டுரையை நிறைவு செய்ய விரும்புகிறேன்.

ஆண்டு 1981 ல் நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராக பணியாற்றிய நேரம். ஆசிரியர் சங்கத் தலைமைப் பொறுப்பு என்னைத்தேடி வந்தது - போராட்டமான சூழல் - அதனை ஏற்றுக் கொள்வதா? வேண்டாமா? என்ற சஞ்சலம். சுவாமியிடம் மீனாட்சி சுவடியின் உத்தரவை வேண்டினேன். நீ பூராடத்தில் பிறந்ததால் போராடப்பிறந்தவன் - நீ தலைமை ஏற்றால் வெற்றி நிச்சயம் - ஆயிரக்கணக்கான ஆசிரியர்கள் - ஊழியர்கள் பயன் பெறுவார்கள் என்று உத்தரவு கிடைத்தது.

அருட்சுவடியின் ஆணைப்படியே போராட்டத்துக்கு தலைமையேற்றேன். அந்தநாள் 24 ஜனவரி 1981. தமிழக அரசு,

அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆசிரியர்கள் - ஊழியர்கள் 750 பேரை 21 நாள் சிறையில் அடைத்தது. சுவாமிக்கு வருத்தத்தோடு என் நிலை குறித்து கடிதம் எழுதினேன்.

**அருட்சுவடியிடமிருந்து வந்த பதில்**

"அம்பலக்கூத்தன் சம்பளத்துக்கா சதுராடினான்
சிகப்புக்கும் பச்சைக்கும் பாலம் அமைத்தால்
நீலமாகத்தானே வரும்,
விதியை நினைத்து வேதனைப்படவேண்டாம்.
விளங்கும் உங்கள் வெற்றி,
அமாவாசை கழித்து நல்ல பாதை பிறக்கும்
அன்னை அருள் உங்களுக்கு உண்டு"

அருட் சுவடியின் வாக்குப்படியே அமாவாசை கழித்து சப்தமி அன்று எங்களுக்கு விடுதலை கிடைத்து. நிர்வாகம் எங்களைப் பேச்சுவார்த்தைக்கு அழைத்து எங்கள் கோரிக்கைகளை எல்லாம் நிறைவேற்றியது. எங்கள் போராட்டம், பெரும் வெற்றியாய் அமைந்ததுடன் தமிழக தொழிற்சங்க ஏட்டில் வரலாறாகப் பதிவானது.

மீனாட்சி அருட்சுவடி மூலம் பல சித்தர்களை எல்லாம் அறிந்து அவர்களிடமெல்லாம் ஆசிபெற்றிருக்கிறேன். அப்படி சுவடிமூலம் நான் கண்டு ஆசிபெற்ற சித்தர்கள் கசவனம்பட்டி அவதூதர் துருவசாமி, கன்னியாகுமரி மாயம்மா, விராலிமலை எச்சில் பொறுக்கி ஆறுமுகசாமி இவர்களில் கர்மவினை நீக்கும் அற்புத சித்தர் எச்சில் பொறுக்கி ஆறுமுகசாமியிடம் நெருங்கிப்பழக "குருவும் கொளையும், பாலும் பழமும்" பெறும் பாக்கியம் எனக்கு கிடைத்தது.

சித்தர் ஆறுமுகசாமி 1981 - ம் ஆண்டு துன்மதி வைகாசி விசாகத்தில் சமாதி ஆகிவிடுவார் என்றும் அவருக்கு ஜீவசமாதி அமைத்து வழிபட்டு வரும் படியாகவும் எனக்கு மீனாட்சி சுவடி உத்தரவு பிறப்பித்தது. அதன்படியே எச்சில் பொறுக்கி ஆறுமுகசாமிக்கு கோட்டையூரில் ஜீவசமாதி அமைத்து – கோயில் கட்டி – குடமுழுக்கு

செய்து – நித்திய பூஜைக்கு ஏற்பாடு செய்து – ஆண்டுதோறும் வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் கடந்த 30 ஆண்டுகளாக விமரிசையாக குருபூஜை நடத்தி வருகிறோம்.

எ.என்.கே.சுவாமிகள் ஒருவருடம் கூட தவறாமல் 30 ஆண்டுகளும் வந்து தலைமை ஏற்று குருபூஜை சிறப்பாய் நடைபெற உதவி வருகிறார்கள். 24 ஆம் ஆண்டு குருபூஜைக்கு முன்னர் சுவடி உத்தரவுப்படி பஞ்சபூத சக்கரப் பிரதிஷ்டை செய்தும், 27 ஆம் ஆண்டு குருபூஜை அன்று பஞ்சலோகத்தில் ஆறுமுகசாமிக்கு உற்சவமூர்த்தி செய்து வைத்தும் பெரும் தொண்டாற்றி வருகிறார்கள். ஆறுமுக சுவாமியின் பக்தர்கள் தியானம் பயில ஏதுவாய் எ.என்.கே சுவாமியின் அருளாணையின்படி "தன்னை அறி" தியான மண்டபம் ஒன்று கட்டப்பட்டு, வரும் 30 ஆம் ஆண்டு வைகாசி குருபூஜையில் செயல்பட உள்ளது. இவ்வளவு உதவிகள் செய்துவரும் எனது குருநாதருக்கு நான் என்ன கைமாறு செய்ய இயலும். அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து 100 ஆம் ஆண்டு விழாவும் கொண்டாட அருள் புரியவேண்டுமென்று குருநாதன் எச்சில் பொறுக்கி ஆறுமுகசாமியை பிரார்த்திக்கிறேன்.



# அத்தியாயம் - 5

## கர்ம வினை நீக்கும் அற்புத சித்தர் ஆறுமுகசாமி

கர்ம வினை நீக்கும் அற்புத சித்தர் ஆறுமுகசாமி கோட்டையூரில் ஜீவசமாதியில் எழுந்தருளி 35 ஆண்டுகள் ஆகிறது. சுவாமியைப் பற்றி சுவாமி? எங்கிருந்து வந்தார்? அவர் வரலாறு என்ன? அவருடைய உபதேசம் என்ன? என்று பலரும் என்னை வினவிய போது, அவர்களுக்கெல்லாம், பெரும்பாலும் மௌனத்தையே பதிலாக தந்திருக்கிறேன். காரணம், சுவாமிக்கு பிறர்கஷ்டங்களை அல்ல முற்பிறப்பில் அவர்கள் செய்த கர்மாவையே வாங்கிதான் அனுபவித்து அவர்களுக்கு அருளாசி வழங்குகின்ற அற்புதசக்தி இருந்தது. அவர் உடம்பிலேயே பூமாதேவி குடிகொண்டிருந்தாள். அதனால் அவர் ஓடி ஒளிந்து திரிவார். அவரைத் தேடி ஆசிபெறுவது என்பது பூர்வஜென்ம புண்ணியம் செய்தவர்க்கே வாய்க்கும். என் அன்னையார் 13 ஆண்டுகள் தவம் செய்து என்னைப் பெற்றதால் சுவாமியை இந்த ஜென்மத்தில் குருவாக வாய்க்கும் பேறுபெற்றேன். என் தாயாரின் விளக்கமாற்றுபிடியில் சிக்கி என் வீட்டுக்கு வந்ததாக சுவாமி எனக்கு சொல்லியிருக்கிறார்கள். ஆறுமுகசாமியோடு எனக்கு 20 ஆண்டுக்கு மேலாகத் தொடர்பு. சுவாமிகள் எனக்கு வைத்த சோதனைகளில் எல்லாம் வெற்றி பெற்றேன். அதனால்தான் என்னை சிஷ்யனாக எற்று, கோட்டையூரில் சமாதி கொள்ள சித்தம் கொண்டு அதற்கான உயில் சாசனம் ஒன்றையும் எழுதிவைத்தார்களே. சுவாமியிடம் "குருவும் கொளையும் பாலும் பழமும்" பெறும் பாக்கியம் பெற்றேன். சுவாமிகள் கர்மாவை அல்ல விராலிமலை முருனின் சாபத்தையே தீர்த்து வாழவைத்தவர்கள் என்பதை "குறையுடைய விராலிமலை முருகனின் சாபத்தை கொண்டு வாழ்வித்தமேலோன்." (பதிகம் - 1) என்ற பதிகவரிகளால் அறியலாம்.

சுவாமி பிறர் கர்மாவை வாங்கி கஷ்டங்கள் அனுபவிப்பதைபார்த்து, அவர் கஷ்டங்கள் அதிகரிக்க நாமும்

காரணமாகிவிடக்கூடாது என்பதாலேயே சுவாமியைப்பற்றிய விபரங்களை பேசுவதை தவிர்த்து வந்திருக்கிறேன். "குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்" என்பார்கள். கோட்டையூர் மக்கள் சுவாமியை கொண்டாடுவதால் மனமகிழ்ந்து பசிப்பிணி மருத்துவர். எனது குருநாதர், அருளாளர் ஏ.என்.கே.சுவாமியின் அருட்சுவடியாம் மீனாட்சி நாடிமூலம் தனக்கு ஐம்பொன்னால் உற்சவவிக்ரகம் செய்விக்க செய்து 27-ம் ஆண்டு குருபூஜை தொடங்கி, குருபூஜைக்கு முதல் நாள் கோட்டையூரில் நகர் வலம் வந்து மக்களுக்கு அருளாசி வழங்கி வருகிறார் சித்தர் ஆறுமுகசாமி.

சுவாமி தன்னை வெளிப்படுத்திக்கொள்ள காலம் கனிந்துவிட்டது என்பதையே இது காட்டுகிறது. ஆன்மீக பத்திரிகைகளும் சவாமியை பற்றி எழுதத் தொடங்கியுள்ளன (திரிசக்தி நவம்பர் 16-30-2009 அகஸ்தியர் விஜயம் அக்டோபர் : 2009, மார்ச் 2004, ஜோதிடமுரசு மே - 2005).

சுவாமியிடம் நான்பெற்ற ஞான அனுபவங்களையும் அவரது வாழ்வின் தத்துவத்தையும், ஆறுமுகசாமி அன்பர்களுடனும் ஆன்மீகத்தேடல் உள்ள நண்பர்களுடனும் பகிர்ந்து கொண்டு அவர்களை நெறிப்படுத்த ஏதுவாய் ஆறுமுகசாமியின் அருள் ஆணையின் படி ஆறுமுகசாமி அறக்கட்டளை அமைத்து "தன்னை அறி" தியான மையம் ஒன்றை உருவாக்கி உள்ளேன். இந்த மையத்தை அமைக்க தேவையான நிலத்தையும், நிதி ஆதாரங்களையும் ஆறுமுகசாமியே உருவாக்கித் தந்துள்ளதை எண்ணும்போது "சேயாக எனை ஆண்டு கோட்டையூர் எழுந்தருளிச் சித்து விளையாடும் அப்பா" என்ற பதிகவரிகள் நிஜமாகி நிற்பதை எண்ணி நெஞ்சுருகி கண்ணீர் மல்கி, நன்றி பாராட்டி நிற்கிறேன்.



# அத்தியாயம் - 6

## கோட்டையூரில் எச்சில் பொறுக்கி ஆறுமுக சுவாமிகள்

பொதுவாக ஒருவரின் கர்மவினைகளை இன்னொருவர் வாங்கிக் கொள்ள முடியாது. அவரவரது கர்மவினையை அவரவர்கள்தான் அனுபவிக்க வேண்டும் என்றுதான் சாஸ்திரங்கள் சொல்கின்றன. ஆனாலும் பிறரது கர்மவினைகளை வாங்கிக் கொள்ளும் இத்தகைய சக்தி படைத்த மகான்கள் இருக்கத்தான் செய்தார்கள். இன்றும் நம் குறிப்பிடத்தக்க ஒருவர்தான் எச்சில் பொறுக்கி ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள் எச்சிக்கலை சுவாமிகள், கர்மவினைச் சித்தர், எச்சிக்கலையும் பொறுக்கும் சுவாமிகள் (அதாவது பக்தர்களுக்கு எந்த விதமான சிக்கல் இருந்தாலும் அதைத் தானே வாங்கிக் கொண்டு பொறுத்து ஆள்பவர்) என்றெல்லாம் இவரை அழைப்பார்கள். அழுக்கான காவி வேஷ்டியே இவரது ஆடை முழங்கால் வரைக்குமான ஒரு சட்டை அணிந்திருப்பார். பார்ப்பதற்குப் பரதேசி போல் தோற்றமளிக்கும் இவருக்கு அடர்ந்து வளர்ந்த தாடி, சடைமுடி இவர் ஜீவ சமாதி ஆகி 28 வருடங்கள் ஆகின்றன.

திருச்சி - மதுரை சாலையில் திருச்சிக்கு அடுத்து வருவது விராலிமலை இங்குதான் ஆறுமுக சுவாமிகளின் காலம் கழிந்தது. ஜீவ சமாதி ஆனது காரைக்குடிக்கு அருகே உள்ள கோட்டையூரில் . ஒரு வைகாசி விசாகத்தன்று சுவாமிகள் சமாதி ஆனார். வைகாசி மாதம் விசாகத்தன்று தானா முக்தி அடைந்து விடுவேன் என்கிற தகவலை சுவாமிகள் தன் சீடர்களிடம் முன்னமேயே சொல்லி இருந்தார். சுவாமிகள் ஜீவ சமாதி ஆகும் நாள் பற்றிக் குறிப்பு. பல ஓலைச் சுவடிகளில் இருந்ததாகவும் பிரமிப்பூட்டும் தகவலைச் சொல்கிறார்கள் அவரது பக்தர்கள்.

விராலிமலையில் முருகப் பெருமான் குடி கொண்ட மலையில் தெற்குமலை அடிவாரத்தில் ஒரு குகையில் பல காலம் வசித்து வந்தார் ஆறுமுக சுவாமிகள். குகையில் வேல் வடிவத்தை பிரதிஷ்டை செய்து அங்கேயே வாழ்ந்தார். பல ஊர்களில் இருந்தும் பக்தர்கள் இவரைத்

தேடி வந்தார்கள். சுவாமிகளின் எட்டு வயதிலேயே மூதேவி (வாராஹி என்றும் சொல்கிறார்கள்) அவரது உடலில் குடி கொண்டாளாம். இத்தகையோருக்கு வாக்குப் பலிக்கும். செயல்பாடுகள் முரட்டுத்தனமாக இருக்ககம். யாராவது இலையில் சாப்பாட்டைக் கொடுத்தால், சாப்பிட்டு முடித்து விட்டு, அந்த இலையைப் பத்திரமாக மடித்து ஒரு மூலையில் வைப்பாராம். தூர எறிய மாட்டார். சில நேரங்களில் தான் இருக்கும் குகைக்குள்ளேயே சாப்பாட்டை வாரி இறைப்பாராம். இப்படி எச்சில் இலையை மடித்து வைத்துப் பத்திரப்படுத்துகிறாரே என்று இதைப் பார்க்க நேரிடும் அவரது பக்தர்கள் சிலர் சில நேரங்களில் முகம் சுளிப்பார்களாம்.

எச்சில் என்பது அசூசைப்படக் கூடிய ஒரு விஷயம் அல்ல. அசுத்தம் அல்ல. மனிதர்களின் மனதில்தான் வேறுபாடு வேரூன்றி இருக்கிறது என்பதை சுவாமிகள் அடிக்கடி சொல்லிக் கொண்டே இருப்பார். இதனால்தான் ஆறுமுக சுவாமிகள் எச்சில் பொறுக்கி சுவாமிகள் ஆனார். கர்மவினைகளை வாங்கிக் கொள்ளும் சக்தி படைத்த மகான் ஒருவர் விராலிமலையில் வசித்து வருகிறார் என்கிற தகவல் வெளியூர் பக்தர்களுக்கு எப்படி தெரிந்தது?

சுவாமிகளின் நெடுநாளைய பக்தர் ஒருவர் சொன்னது. கர்மவினையால் நான் பெருமளவு பாதிக்கப்பட்டிருந்தேன். எத்தனையோ ஜோசியரிடம் போனேன். பரிகாரங்கள் சொன்னார்கள். எல்லாவற்றையும் செய்தேன். பலன் இல்லை. கடைசியில் நாடி ஜோதிடர் ஒருவரிடம் போனேன். அவர் சில ஓலைச் சுவடிகளைப் பார்த்து விட்டு, கர்மவினைகளைப் போகக்கூடிய சித்தர் ஒருவர் விராலிமலையில் இருப்பதாக ஓலை சொல்கிறது. அங்கே போய் அவரைத் தேடிக் கண்டுபிடித்து உங்கள் பூர்வ வினைகளைப் போக்கிக் கொள்ளுங்கள் என்றார். அதன்படி குடும்பத்தினருடன் விராலிமலைக்குப் பயணமானேன். ஆறுமுக சுவாமிகளையும் அங்கே தேடிக் கண்டுபிடித்து என் கர்மவினைகளை அவர் வாங்கிக் கொண்டார். அதன் பிறகு என் வாழ்க்கை பிரகாசமடையத் தொடங்கியது.

இன்னொரு பக்தர்களின் கர்மவினைகளை சுவாமிகள் வாங்கிக் கொண்டிருந்தபோது, திடீரென அவரது ஒரு காதில் இருந்து சீழ் வழிந்தது. நான் உட்பட உடன் இருந்த பக்தர்கள் அனைவரும் பதறிப் போய் விட்டோம். பிறகுதான் சுவாமிகள் சிரித்தபடியே சொன்னார் இது அவனது கர்மவினை எனக்கு வந்து விட்டதல்லவா...... அதுதான் சீழ் ரூபத்தில் வெளியேறுகிறது. இதுதான் இவரது மகிமை. சுவாமிகள் இருக்கும்போது மட்டும்தான் என்றில்லை.... இன்றும் அவரது ஜீவ சமாதி தேடி கோட்டையூருக்கு வரும் பக்தர்களின் கர்மவினைகளை வாங்கிக் கொண்டு அருள் புரிந்து வருகிறார். இவரது சன்னதியில் மனமுருகிப் பிரார்த்திக்கும் எந்த ஒரு பக்தரின் கோரிக்கையையும் சுவாமிகள் கைவிடுவதில்லை.

கர்மவினைச் சித்தர் என்று எல்லா பக்தர்களாலும் அழைக்கப்படும் இவர் தான் வாழ்ந்த காலத்தில் தன்னைத் தேடி வந்த பக்தர்களின் கர்மவினைகளைத் தானே வாங்கிக் கொண்டார். இதற்கென இவர் வசித்த விராலிமலைக்குப் பல பக்தர்கள் வேண்டுகோளை ஏற்று, அவ்வப்போது சுவாமிகள் வெளியூர்களுக்கும் பயணப்படுவதுண்டு. அப்படி சிதம்பரம், திருச்சி, சென்னை, தஞ்சாவூர் போன்ற ஊர்களுக்குச் சென்றிருக்கிறார். சுவாமிகளின் முன்னிலையில் தங்கள் வீட்டில் ஹோமம் போன்ற சுப நிகழ்வுகளை நடத்துவதற்காகப் பக்தர்களே வாகனத்தை ஏற்பாடு செய்து கூட்டிப் போவார்கள்.

கர்மவினைகளைப் போக்குவது ஒரு பக்கம் என்றாலும் இத்தகைய சித்த புருஷரின் ஆசியைப் பெறுவதற்காக சாதாரண பக்தர்களும் விராலிமலைக்கு வந்து செல்வது வழக்கம். சுவாமிகளுக்கு சாப்பாடு டீ ஏதாவது வாங்கித் தந்து விட்டு, அவரது உபதேச மொழிகளைக் கேட்டுக் செல்வார்கள் பல பக்தர்கள் அப்படித்தான் கோட்டையூர் நகரத்தார் அன்பரான ஏஎல்.சிதம்பரமும் சுவாமிகளுக்குபழக்கமானார். சுவாமிகளின் அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமானார். இவர்தான் தற்போது சுவாமிகளின் ஜீவ சமாதித் திருப்பணிகளைக் கவனித்துக் கொண்டே வருகிறார்.

சுவாமிகளிடம் ரொம்ப ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். வாராஹி அவரிடம் குடி கொண்டிருப்பதால், அவர் சொல்லும் எந்த வாக்கும் பலிக்கும். எனவே, ரொம்ப ஏடாகூடமான ஆசாமிகள் சுவாமிகளிடம் நெருங்க மாட்டார்கள். அவர் பாட்டுக்கு ஏதாவது சொல்லப் போய், இருக்கக் கூடிய வாழ்க்கையும் பாழாகிப் போய் விடுமோ என்ற அச்சம்தான் இதற்குக் காரணம். சுவாமிகளுக்குத் தெரியும் - எவருக்கு எத்தகைய வாக்கு கொடுக்க வேண்டும் என்று அஞ்ஞானிகளுக்கு இது புரியாது. சுவாமிகளிடம் பல காலம் பழகக் கூடிய பாக்கியம் எனக்குக் கிடைத்ததை அவரது திருவருள் என்றுதான் சொல்ல வேண்டும். விராலிமலையில் பல முறை சந்தித்து உரையாடி உள்ளேன். கோட்டையூரில் உள்ள என் வீட்டுக்கும் ஓரிரு முறை வந்து உணவு அருந்தி இருக்கிறார். சுவாமிகளின் ஆசுதான் என்னை இன்றளவுக்கு சுமூகமாக வாழ வைத்துக் கொண்டிருக்கிறது. பொணம் எரியுது. இப்பதான் நெஞ்சுக்கறி தின்னுட்டு வந்தேன் என்பார் சுவாமிகள் சில வேளைகளில் இதெல்லாம் வாராஹியின் கொடூரமான சொரூபம்.

தான் சமாதி ஆகப் போகும் தினத்தை முன்கூட்டியே சொல்லி இருந்தார் சுவாமிகள். 18.5.81 வைகாசி மாதம் விசாக நட்சத்திரம், திங்கட்கிழமை, சுவடிகளில் சொல்லி இருந்தபடியும் சுவாமிகள் அறிவித்திருந்தபடியும் அவர் அன்றைய தினம் சமாதி ஆகி விட்டார். கோட்டையூரில் இந்த திசையில் ஒன்பது அடி ஆழத்தில் ஒரு குழி உள்ளது. என் ஜீவன் அடங்கியதும் அங்கே கொண்டு போய் சமாதி வையுங்கள். நான் சமாதி கொண்ட இடத்தைச் சுற்றி பின்னாளில் ஒரு நகர் தோன்றும் காடு நாடாகும் என்று ஏற்கெனவே சுவாமிகள் கூறி இருந்தபடி அவரை ஒரு டாக்ஸியில் வைத்து விராலிமலையில் இருந்து கோட்டையூர் கொண்டு வந்தோம். சுவாமிகள் சொன்ன குறிப்பின்படி அவர் சொன்ன திசையில் சொன்ன இடத்தில் சொன்ன ஆழத்தில் ஒரு குழி இருந்தது அங்கேயே சமாதி வைத்தோம் என்றார்.

சாதுக்களை அடக்கம் செய்யும் முறைப்படி விபூதி, வில்வம், புஷ்டம் போன்றவற்றை இட்டு அவரது சமாதியை நிரப்பினார்கள்.

திருவண்ணாமலையில் இருந்து ஒரு லிங்கத் திருமேனி கொண்டு வந்து சுவாமிகளின் சாமாதியின் மேல் பிரதிஷ்டை ஆனது. உத்ஸவர் திருமேனியும் உள்ளது. சுவாமிகளின் அருளாட்சி தினமும் இங்கே நடந்து கொண்டிருக்கிறது. குழந்தைப்பேறு, திருமணத்தடை, போன்ற பல குறைகளை சுவாமிகளின் சன்னதியில் கொட்டி விட்டுச் செல்கிறார்கள். அனைத்து பிரார்த்தனைகளும் இங்கே நிறைவேறுகிறது.

சுவாமிகளின் ஜீவ சமாதிக்கு மதில்சுவர், தியான மண்டபம், கீழ்ப்புற மண்டபம் மேற்புற மண்டபம் கட்டி 23.5.94 அன்று பதின்மூன்றாவது குருபூஜையும் முதல் கும்பாபிஷேகமும் நடந்தேறியது. 22.5.2005 ல் இரண்டாவது கும்பாபிஷேகம் நடந்தது. ஒவ்வொரு வருடமும் வைகாசி மாதம் விசாக நட்சத்திரமும் பவுர்ணமி திதியும் கூடிய நன்னாளில் குருபூஜை சிறப்பாக நடந்து வருகிறது. குருபூஜையின்போது நாட்டின் பல பகுதிகளில் இருந்து சாதுக்கள் வந்து திரள்கிறார்கள்.

தினமும் இரு கால பூஜை நடக்கிறது. கும்பம் வைத்து ருத்ர ஜபம் சொல்லி அபிஷேகம் செய்யப்படுகிறது. தவிர வாரம்தோறும் வியாழக்கிழமை அன்று இரவில் சுவாமிகளுக்கு விசேஷ அபிஷேகம் மற்றும் ஆராதனை நடக்கிறது. அமாவாசை அன்று மதியம் அபிஷேகம் மற்றும் அன்னதானமும் பவுர்ணமி அன்று இரவு அபிஷேகமும் மதியம் அன்னதானமும் நடக்கிறது. பல பக்தர்கள் ஓரிரவு இங்கு தங்கி சுவாமிகளின் ஆசியைப் பெற்றுச் செல்வதை விரும்புகிறார்கள்.

பூர்வ ஜன்மத்தில் கொஞ்சம் ஒட்டிக் கொண்டிருக்கும் புண்ணிய பலத்தால் மட்டுமே இவரது ஜீவ சமாதியைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கும் பிற ஊர்களில் இருந்து வரும் சாதுக்களுக்கு இங்கே சிறப்பு மரியாதை செய்யப்படுகிறது. சுவாமிகளுக்கு பல இளைஞர்கள் சீடராக இருந்தார்கள். எனவே ஆன்மீகத்தின் வலிமையையும், இறை பக்தியின் சிறப்பையும் அவர்கள் மனதில் புகுத்துவதற்காக ஆறுமுகம் தன்னை அறி தியான மையம் ஒன்றைக் தொடங்கி இருக்கிறார்

ஏஎல்.சிதம்பரம் பக்தியைத் தவிர, பண்பாடு தொடர்பான பல விஷயங்களையும் இளைஞர்களுக்கு போதிப்பதற்காகத்தான் இந்த மையம்.

கர்மவினையால் அவதிப்படுபவர்கள்தான் இந்தக் கலியுகத்தில் அதிகம். இறை அருளால் ஏராளம் சாதித்த எச்சில் பொறுக்கி ஆறுமுக சுவாமிகளின் திருச்சன்னிதியைத் தேடிச் செல்லுங்கள். உங்கள் குறைகளைக் கொட்டுங்கள். அவரது திருவடி தரிசனம், உங்களைத் திடப்படுத்தும், நம்பினோரைக் கைவிட மாட்டார் ஆறுமுக சுவாமிகள்.

## தகவல் பலகை :

**தலம் : கோட்டையூர்**

**சிறப்பு : எச்சில் பொறுக்கி ஆறுமுக சுவாமிகளின் ஜீவ சமாதி.**

எங்கே இருக்கிறது? காரைக்குடியில் இருந்து திருச்சி செல்லும் வழியில் காரைக்குடியில் இருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் இருக்கிறது. கோட்டையூர் திருச்சியில் இருந்து சுமார் 80 கி.மீ. தொலைவு. கோட்டையூர் மெயின் ரோட்டில் இருந்து சுமார் ஒண்ணரை கி.மீ. தொலைவு உள்ளே சென்றால் சுவாமிகளின் ஜீவ சமாதி.

எப்படிப் போவது? திருச்சி - காரைக்குடி சாலையில் பேருந்துகளில் பயணித்தால் கோட்டையூரில் இறங்கிக் கொள்ள வேண்டும். இந்த சாலையில் பயணிக்கும் சில பேருந்துகள் கோட்டையூர் நிறுத்தம் வழியாக வராமல் பைபாஸ் சாலையில் செல்லும், அத்தகைய பேருந்துகள் என்றால், கோட்டையூர் ஸ்ரீராம் நகர் என்று கேட்டு இறங்கிக் கொள்ள வேண்டும். பட்டுக்கோட்டை அறந்தாங்கி போன்ற பல ஊர்களில் இருந்தும் கோட்டையூருக்குப் பேருந்து வசதி உண்டு. கோட்டையூர் மெயின் ரோட்டில் இருந்து ஜீவ சமாதிக்கு ஆட்டோ வசதி இருக்கிறது.

தொடர்புக்கு :

**ஏ.எல்.சிதம்பரம்,**

37 வெங்கடாசலம் செட்டியார் தெரு, கோட்டையூர் - 630 106,

(காரைக்குடி அருகில்)

**போன் : 04565 - 286587. செல் :9443406587**

*நன்றி : திருவடி சரணம்*

## அற்புத சித்தர் ஆறுமுக சுவாமி

கண்டவரை அன்பாலே சாந்தமென ஈர்க்கின்ற
கருணைபொழி ஈர விழிகள்!
காலளவு நெடுஞ்சட்டை! கையளவு பிணிப்புண்ட
கனமான சடையின் கற்றை!
தண்டமொரு கையிலே அக்கமணி கழுத்திலே
தளராத மெய்யின் வித்தை!
தானாக வந்தன்றிப் பசிக்காகச் செல்லாத
தருமநெறி வாங்கு பிச்சை!
எண்டிசையும் நொடிப்பொழுதில் வலமாக வந்துமே
எளியனாய் வாழ்ந்த வாழ்க்கை!
அவையெலாம் கொண்டவா! இன்றெனை ஆண்டவா!
ஈசனே! ஆறுமுக தேவே!



கண்டதும் எனை ஆட்கொண்ட எனது குருநாதர்

அருட்கவிஞர் அருசோ